# புலவர் குழந்தையின் பிறநூல்கள்

1. இராவண காவியம்
(அரசினரால் தடை செய்யப்பட்டது)
2. தமிழ் வாழ்க (நாடகம்)
3. தமிழெழுத்துச் சீர்திருத்தம்
4. இன்னூல் (இலக்கணம்)
5. திருக்குறள் குழந்தையுரை
(1330 குறளுக்கும் பேருரை)
6. திருக்குறளும் பரிமேலழகரும்
7. நெருஞ்சிப் பழம் (காதற் செய்யுள்)
8. கொங்கு நாடும் தமிழும்
9. கொங்குக் குலமணிகள்
10. தீரன் சின்னமலை

---

## விரைவில் வெளிவரும் நூல்கள்

1. தொல்காப்பியர் காலத் தமிழர்
2. யாப்பதிகாரம்
3. நீதிக் களஞ்சியம்
4. சின்னமலை (நாடகம்)
5. நனவுங் கனவும் (செய்யுள்)

# முகவுரை

---

" மக்கள் தாமே ஆறறி வுயிரே" என்பது தொல் காப்பியம். அவ் வாறுவ தறிவாகிய பகுத்தறிவின் பயனே மொழி என்பது. மக்களை மாக்களினின்று வேறுபடுப்பது மொழியே யாகும். மொழியே மக்களின் நாகரிக முன்னேற்றத்திற்குக் காரணம் எனலாம். " மொழியிலார்க் கேது முதுநூல் " என்ற முதுமொழிப்படி, மொழியின்றேல் முதுநூலும் புது நூலுங் கற்று மக்கள் முன்னேற்றமுற முடியா தல்லவா ?

உலகில் பன்னூற்றுக் கணக்கான மொழிகள் வழங்கி வருகின்றன. அவற்றுள், பெரும்பான்மை யான மொழிகட்கு எழுத்தே இல்லை. ஒரு சில மொழிகளே பேசவும் எழுதவும் உரியனவாக உள் ளன. பேசுவதற்கு-உலகவழக்கு எனவும், எழுதுவ தற்கு - செய்யுள் வழக்கு எனவும் பெயர். செய்யுள் வழக்கு – செய்யுள்நடை, உரைநடை என இரு வகைப்படும்.

ஒரு மொழி வளர்ச்சிக்கும், அம் மொழியின் அழியா இளமை நலத்துக்கும் உரைநடையினும் செய்யுள் நடையே சிறந்ததாகும். இது, இலக்கிய வளமும் இலக்கண வரம்பும் உடைய எல்லா மொழி கட்கும் ஒத்த இயல்பினதாகும். தமிழ் மொழியின் பழமைக்கும் இளமைக்கும் செழுமைக்கும் வளமைக் கும் தமிழிலுள்ள செய்யுள் நூற்களே சிறந்த காரண

மாகும். தமிழ்க் குழவியை நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாக வளர்த்துவரும் செல்வச் செவிலி செய்யுள் நடையே யாகும்.

சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளை - எண்வகைச் சுவையும் இனிதின் அமைய, சொல் லணி பொருளணி என்னும் இருவகை அணி நலத் துடன், சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் முதலிய அழகு மிளிர, கருத்தை யள்ளுங் கற்பனைத் திறத்துடன், திட்பமும் நுட்பமும் செறிவும் தெளிவுந் திகழ்தரச் செம்மையாய் அமைக்க ஏற்ற இடம் செய்யுளே யாகும்.

எளிதில் மனப்பாடஞ் செய்யவும், கற்பதை அமைவுறக் கருத்தில் இருத்தவும், உன்னியுன்னி ஓர்ந்துணர்ந் துவக்கவும், இயன்றுங்கு இனிதின் எடுத்து இயம்பவும் ஏற்றது செய்யுளே யாகும். மோனை எதுகை முதலிய தொடை யழகும், சீர் களின் சிறப்பினால் அமையும் நடை யழகும் பொருந்த, இனிய ஓசை நலத்தால் படிப்போர்க்கும் கேட்போர்க்கும் இன்பூட்டி, உள்ளக் கிளர்ச்சியை யுண்டாக்கி, கருத்துணர்ச்சியில் கருத்தைத் தோய் விக்க வல்லது செய்யுள் நடையே யாகும். திருப் பித் திருப்பிப் பன்முறை படித்துச் சுவைத்து இன் புறற் கேற்றது செய்யுள் நடையே யன்றோ? 'தாமின் புறுவதும் உலகின் புறுவதும் அதனால் காமுறுவதும்' செய்யுளே யாகும். மொழிப் புலமை பெறச் செய்யுட் பயிற்சியே சிறந்த கருவியாகும்.

பாட்டுக்களை இசையுடன் பிறர் பாடக் கேட்டு இன்புறுவதோடு நாமும் இசையுடன் பாடி இன்புற

லாம். இசைப் பாக்களே யன்றி, வெண்பா முதலிய பாக்களும் செப்பலோசை முதலிய ஓசை நலத்துடன் அமைந்திருப்பதால் அப் பாக்களையும், இசை நலம் இனிதின் அமைந்த தாழிசை முதலிய பாவினங்களையும் இசையுடன் பாடி இன்புறலாம்.

இன்னும், மாத்திரை மரபு தூக்கு நோக்கு அளவு பயன் எச்சம் முன்னம் பொருள் துறை மாட்டு வண்ணம் முதலிய செய்யுள் உறுப்புக்கள் அமைய (தொல், செய்-1), நயம் என்னும் நன்னலம் பொலிவது செய்யுளே யாகும். இத்தகைய சிறப்பியல்புகள் உரைநடைக் கின்மை யறிக.

நமது முன்னையோர் இலக்கியம், இலக்கணம், கணக்கு, ஒழுக்கம், மருத்துவம், வாகடம், அரசியல் முதலிய எல்லா நூல்களையும் செய்யுள் நடையிலேயே செய்தமை இத்தகைய சிறப்புடைமை பற்றியே யாகும். தமிழன்னையின் உயிர்நாடி செய்யுள் நடையே யாகும். செய்யுள் நடை ஒழிந்தால் தமிழ் மொழியின் சீரும் சிறப்பும் ஒருங்கே சிதைந்தொழிந்துவிடு மென்பதில் சிறிதும் ஐயம் இல்லை.

எனவே, பழமை நோக்கம் புதுமை யாக்கம் என்னும் முன்னேற்றப் பண்புகட் கேற்ப, பழங் கருத்துக்களோடு அவ்வக் காலத்துக் கேற்ற புதுக் கருத்துக்களை யமைத்து, அவ்வப்போது ஒவ்வொரு துறைக்கும் செய்யுள் நூற்கள் சில பல செய்து தமிழ் மொழியைப் போற்றி வளர்த்தல் தமிழ்ப் புலவர் பெருமக்களின் நீங்காக் கடமையாகும்.

**செய்யுள் மரபு:** பழந்தமிழ்ப் புலவர் பெருமக்கள், மக்கள் வாழ்க்கை முறையை அகம் புறம் என

இருவகைப் படுத்து, அவற்றுள், அகத்திணைக்கு முதல் கரு உரி என முப்பொருள் படைத்து, அவற்றைப் புறத்திணைக்கும் பொருந்துமாறு தொகுத்து, கருப்பொருள் என்னும் இயற்கைப் பொருள்களைக் கற்போர் விருப்புறும் வகையில் கற்பனை நலத்துடன் பொற்புற வமைத்துச் செய்யுள் செய்து மக்களை வாழ்வித்து வந்ததோடு, தமிழ் மொழியையும் வளர்த்து வந்தனர். இம் மரபு கடைச்சங்க காலம் வரை தொடர்ந்து நடந்து வந்தது. அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை முதலிய கடைச் சங்க நூல்களெல்லாம் அவ்வாறு செய்யப்பட்ட செய்யுட்களின் தொகுப்பே யாகும்.

அகம் புறம் தழுவி, அறம் பொருள் இன்பப் பாகுபாட்டினும் செய்யுட் செய்து வந்தனர். திருக்குறள், நாலடியார் முதலிய நூல்கள் அத்தகைய அமைப்புடையனவே யாகும்.

கடைச் சங்கப் பிற்காலப் புலவர்கள் அவ்விரு மரபினையுங் கைவிட்டு, கதை தழுவிய நூல்கள் செய்யத் தொடங்கினர். ஐம்பெருங் காப்பியங்களும், ஐஞ்சிறு காப்பியங்களும் இம்முறையிற் செய்யப் பட்டனவேயாகும். சிலப்பதிகாரமே இதன் தொடக்க நூலாகும். இவ்விரு வகை ஐங்காப்பிய நூல்களும் கதை தழுவிய சமயச் சார்புடையவை யாகும்.

இனி, கி. பி. 7-ஆம் நூற்றுண்டு முதல் இம் முறையையுங் கைவிட்டு, சமயச் சார்புடைய அன்புப் பாடல்கள் பாடத் தலைப்பட்டனர். மூவர் தேவாரம், மணிவாசகர் திருவாசகம், ஆழ்வார் நாலாயிரம் முதலியன இத்தகையவை யாகும்.

12-ஆம் நூற்றுண்டு முதல் சமயப் புராணங்கள் செய்யலாயினர். பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் முதலியவை அத்தகையவை. கந்த புராணம், கம்பராமாயணம் போன்றவையும் இதன் பாற்படும்.

இக்கால முதற்கொண்டு கோவை, உலா, அந்தாதி, பிள்ளைத் தமிழ், கலம்பகம் முதலிய தொண்ணூற்றுறு வகைப் பனுவல்கள் தோன்றலாயின. இப் பனுவல்கள் தெய்வங்கள்மீதும் செல்வர்கள் மீதும் பாடப் பெற்றன. அருட் பரிசும் பொருட் பரிசும் கருதிப் பாடப் பெற்ற இப் பனுவல்கள் தமக்குரிய தமிழ் வளர்ச்சித் தொண்டை ஒருவாறு ஆற்றின எனலாம்.

16-ஆம் நூற்றுண்டில் தலப் புராணங்கள் தோன்றின. ஒவ்வொரு தலத்திற்கும் (கோயில்) புராணம் இன்றியமையாச் சிறப்புடையதாயிற்று. மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்றும் தலப் புராணத்தின் கருப்பொரு ளாகும். தமிழ் நாட்டிலுள்ள எல்லாத் தலங்கட்கும் புராணம் உண்டு என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.

சிலேடை வெண்பா : 17-ஆம் நூற்றுண்டைச் சிலேடை வெண்பாவின் தொடக்க காலம் எனலாம். பிள்ளைப்பெருமா ளையங்கார், சைவ எல்லப்ப நாவலர், கடிகை முத்துப் புலவர், காளமேகப் புலவர் முதலியோர் சிலேடையைப் புலமைத் தலைக்கோலாகக் கொண்டனர். இதில், காளமேகப் புலவர் முதலிடம் பெறுவர்.

திரிகூட ராசப்ப கவிராயர் என்பார், குற்ருலச் **சிலேடை** வெண்பா என ஒரு தனிச் சிலேடை நூல் செய்தனர். அவ்வாறே, நமச்சிவாயக் கவிராயர் என்பார் **சிங்கைச் சிலேடை** வெண்பாவும், தொட்டிக் கலைச் சுப்பிரமணிய முனிவர் என்பார் கலைசைச் **சிலேடை** வெண்பாவும், வெ. ப. சுப்பிரமணிய முதலியார் என்பார் நெல்லைச் சிலேடை வெண்பாவும் செய்தனர். இச் சிலேடை வெண்பா நூல்களைத் தலப் புராணத்தின் மறுபதிப் பெனலாம்.

**சிலேடை வெண்பாவின் இலக்கணம்:** சிலேடை வெண்பா நூல் - நேரிசை வெண்பா நூறு கொண்டது; வெண்பாவின் முதலடியில் இரண்டும் இரண்டுக்கு மேற்பட்ட பொருளும், இரண்டாவதடியில் அவற்றிற்கேற்ற சிலேடையும் அமைய வேண்டும்; தனிச் சீரிலும், பின்னிரண்டடிகளிலும் அத்தல இறைவனின் திருவிளையாடல்கள் அமைய வேண்டும்; பின்னிரண்டடிகளில் மடக்கு அல்லது திரிபு என்னும் சொல்லணிகள் அமைய வேண்டும். குற்ருலச் சிலேடை வெண்பா முதலியவை இவ்வாறு அமைந்தவையே யாம்.

இச் சிலேடை வெண்பா என்னும் நூல், 96 வகைப் பனுவல்களில் ஒன்ருகாவேனும், இஃதும் ஒருவகைப் பனுவலே யாகும். சிலேடை என்பது பொருளணிகளில் ஒன்ருகும். அது சிலேடையணி எனப்படும். எனவே, சிலேடை வெண்பாவில், முன்னிரண்டடிகளில் சிலேடை யென்னும் பொருளணியும், பின்னிரண்டடிகளில் மடக்கு, அல்லது திரிபு என்னும் சொல்லணிகளும் அமைந்திருக்கும்.

செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை எனச் சிலேடை இருவகைப்படும். ஒரு சொற்றொடரை அப்படியே பல பொருளுக்கு இயையப் பொருள் கொள்வது - செம்மொழிச் சிலேடை எனப்படும். இந் நூலின் 18-ஆம் பாட்டைப் பார்க்க. ஒரு சொற்றொடரைப் பிரித்துப் பல பொருளுக்கு இயையப் பொருள் கொள்வது - பிரிமொழிச் சிலேடை எனப்படும். இந்நூலின் 7-ஆம் பாட்டைப் பார்க்க. சிலேடை - பல்பொருட் சொற்றொடர்.

திருநணுச் சிலேடை வெண்பா : இது திருநணு என்னும் ஊரின் சிறப்பினைக் கூறும் சிலேடை வெண்பா என விரியும். திருநணு - பவானி.

> ''பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையி னானே'' (நன்னூல்)

என்ற விதிப்படி, இந் நூல் காலத்துக் கேற்றவாறு புதிய முறையில் செய்யப்பட் டுள்ளது. வெண்பாவின் தனிச் சீரிலும், பின்னிரண்டடிகளிலும் திருநணுவின் இயற்கை வளம், காவிரி வானியாறுகளின் சிறப்பு, கூடுதுறைச் சிறப்பு, சுற்றுப்புற ஊர்களின் சிறப்பு, நணுவின் வரலாறு, நணுவில் நடக்கும் பல்வகைக் கைத்தொழிற் சிறப்பு, வணிகச் சிறப்பு, உழவின் சிறப்பு, மக்களின் வாழ்க்கை முறை, பண்பாடு, ஒழுக்கமுறை, கல்விச் சிறப்பு முதலியன நன்கு கூறப்பட்டுள்ளன. முன்னிரண்டடிகளிலும் பெரும்பாலும் இத்தகைய பொருள்களே அமைந்துள்ளன.

சிலேடை வெண்பாவின் முன்னிரண்டடிகளில் சிலேடையும், பின்னிரண்டடிகளில் மடக்கு அல்லது திரிபும் அமைய வேண்டிய இலக்கணப்படியே

இந் நூல் வெண்பாக்களிலும் அமைந்துள்ளதால், செய்யுள் பழமை நோக்கப் பண்பைத் தழுவியும், பொருள் புதுமையாக்கப் பண்பைத் தழுவியும் இந் நூல் அமைந்துள்ளது. இந் நூல் வெண்பாக் களின் முதலடி இயைபுத் தொடையாக அமைந் துள்ளமை தனிச் சிறப்பாகும்.

புலவர் பெருமக்கள், ஒரு நாட்டைப் பாடும் போது, அந்நாடு எவ்வாறு இருக்க வேண்டும் என்று விரும்புகிருர்களோ அந்நாடு அவ்வாறு இருப்பதாகவே கூறுவர். அங்ஙனமே, அந்நாட்டு மக்கள் எவ்வாறு நடக்க வேண்டும் என்று விரும்புகிருர்களோ அவர்கள் அவ்வாறு நடப்ப தாகவே கூறுவர். இது புலவருலகம் எனப்படும். (இந்நூலின் 92-ஆம் பாட்டைப் பார்க்க) இவ்வாறு நன்ஞட்டையும் நன்மக்களேயும் படைத்துக் கூறி, அப்புலவருலகைப் பின்பற்றி, மக்கள் தம் நாட்டை அவ்வாறு நன்ஞடாக்கி நன்மக்களாக வாழும்படி தூண்டி, மக்களே வாழ்விப்பது புலவர் மரபாகும். பழைய தமிழ் நூல்களில் நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு என்ற உறுப்புக்கள் அமைந்தமை இம்முறை பற்றியே யாகும். அப்புலவர் மரபுப்படியே, இந் நூலுள்ளும் மக்கள் இவ்வாறு நடக்க வேண்டும் என்பதை அவ்வாறு நடப்பதாகவே கூறப்பட் டுள்ளது. அதாவது, நன்மக்கட் குரிய நடக்கை முறைகள் நன்மக்களின் நடக்கை முறைகளாகவே கூறப்பட்டுள்ளன. இந்நூலேக் கற்போர் அப்பய னுறுவார்களாக. இந்நூல் வெண்பாக்கள் தனித் தமிழில், இனிய எளிய செந்தமிழ் நடையில் அமைந் துள்ளமை குறிப்பிடற்பாலது.

திருநணா : இச்சிலேடை வெண்பாவைப் படிப்பவர் இதன் பிறப்பிடமான திருநணாவைப் பற்றித் தெரிந்துகொள்ள விரும்புவது இயல்பே. திருநணா என்பது பவானியின் மறு பெயர். இது இலக்கியப் பெயராகப் பயன்பட்டு வருகிறது. பவானிக்குத் திருநணா என்னும் பெயர் தொன்று தொட்டே வழங்கி வருகிறது. இப் பெயர் நணா, நணாவூர் எனவும் வழங்கும்.

"வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டுபாடச்
செந்தேன் தெளியொளிரத் தேமாங் கனியுதிர்க்குந்
திருநணாவே"
(சம்பந்தர் - தேவாரம்)

"அப்பாலைக் குடபுலத்தின் ஆறணிந்தார் அமர்கோயில்
எப்பாலுஞ் சென்றேத்தித் திருநணா வினையிறைஞ்சி"
(பெரிய புராணம் - 327)

"ஞானக்-கண்ணாகி நணாவில் வீற்றிருந்த சிவக்
கொழுந்தை"
(பவானித் தலப்புராணம்)

"வாலிப காசிநண் ணாவூர் பயில்கொங்கு மண்டலமே"
(கொங்கு மண்டல சதகம்)

எனக் காண்க. திருஞான சம்பந்தர் கி. பி. 7-ஆம் நூற்றாண்டினராதலால், திருநணா என்னும் பெயரின் பழமை விளங்கும்.

திருநணா என்னும் பெயர்க் காரணம் விளங்கவில்லை. மிகப் பழமையால் வழக்கொழிந்தது போலும்.

'பவானி என்னும் இத் திருப்பதியைத் தரிசித்தோர்க்கு யாதொரு தீங்கும் நண்ணாத நற்றல

மாதலின் நண்ணூர், அல்லது திருநணா எனப் பெயர் பெற்றது' (பவானித் திருத்தல வரலாறு-பக்-4) என்பது பொருத்தமாக இல்லை. 'யாதொரு தீங்கும் நண்ணுதாகலின் நண்ணூர் எனப் பெயர் பெற்றது' என்பது பொருந்து மேனும், 'திருநணா' என்ப தற்கு அக்காரணம் சிறிதும் பொருந்தாது. திரு நணா-திருநண்ணா என எதிர்மறைப் பொருள் படுதல் காண்க. திரு-செல்வம், அல்லது மங்கலம். செல்வம் நண்ணா-நண்ணாது, மங்கலம் நண்ணாது-அணுகாது-பொருந்தாது என்று ஓர் ஊர்க்குப் பெயர் வைத்திருப்பர்? திருக்கோவையாரின் உரையா சிரியர், 'திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' என்கிறார். அவ்வுரைப்படி, திருநணா-கண்டாரால் விரும்பப்படாத தன்மையை யுடையது என்றாகிறது. திருநணா என்பதன் பெயர்க் காரணத்தை யறியாமலா புலவர்கள் அப்பெயரைத் தம் பாட்டி லமைத்துப் பாடி யிருப்பர்? எனவே, இப் பெயர்க்கு வேறு காரணம் இருத்தல் வேண்டும்.

ஒரு கோயில் அல்லது தலத்தில் உள்ள மரத் தின் பெயர் அத்தலத்திற்கும், அஃதுள்ள ஊர்க்கும் பெயராக வழங்குதல் உண்டு. 'தில்லை' என்னும் மரத்தின் பெயரே சிதம்பரத்திற்குத் 'தில்லை' என் னும் பெயர் ஏற்பட்டதற்குக் காரணமாகும். தில்லை என்பது சிதம்பரம் கோயிலிலுள்ள ஒரு மரம். 'திரு வீழிமிழலை' என்னும் ஊர்க் கோயிலில் வீழிமிழலை உள்ளதால் அவ்வூர்க்கு அப்பெயர் ஏற்பட்டது. வீழி-விழுமி-விழும்பிச் செடி. மிழலை-புதர். வீழி மிழலை-விழுமிப் புதர். இங்ஙனமே 'நணா' என்பதும் ஒரு மரத்தின் பெயராக இருக்கலாம். அது தல

மரமாக இருந்ததால் பவானிக்கு அப் பெயர் ஏற்பட்டது போலும்.

தமிழிலுள்ள நிகண்டு, அகராதி முதலியவற்றில் நுணா (தணக்கு) என்னும் பெயர்தான் காணப்படு கிறது. நணா என்னும் பெயர் காணப்படவில்லை. நணா என்னும் சொல் நுணா எனத் திரிந்திருக்கவேண்டும்; அல்லது நணா என்னும் பெயர் வழக்கு வீழ்ந்திருக்க வேண்டும். நணா என்னும் பெயர் கி. பி. 7-ஆம் நூற்றுண்டினரான சம்பந்தர் காலத்திலேயே பெரு வழக்குடையதாய் இருந்திருப்பதால் நாளடைவில் பெயர்க் காரணம் வழக்கு வீழ்ந்தது போலும். இப் போது திருநணாக் கோயிலில் இருக்கும் தலமரம் வதரி மரமாகும். வதரி - இலந்தை. அதனுல், திரு நணாச் சிவனுக்கு வதரிவனேச்சுரர் என்னும் பெயர் வழங்குகிறது.

பவானிக்கு இரண்டு கல் வடக்கில் ஊராட்சிக் கோட்டை மலை என்னும் மலை இருக்கிறது. அது எளிதில் ஏறமுடியாத செங்குத்தான உயர்ந்த முடியை உடையது. அதனுல் அதற்கு நண்ணுமலை என்னும் பெயர் வழங்கி வந்தது. நண்ணுமலை; நண்ணாத - நண்ண முடியாத-எளிதில் அடையமுடி யாத உயரமான முடியை உடைய மலை என்பது பொருள். அண்ணாமலை என்பது காண்க. அண்ணா- அணுகமுடியாத.

பதிற்றுப் பத்து என்னும் சங்க நூலின் ஏழாம் பத்துப் பதிக இறுதியில்,

"பாடிப் பெற்ற பரிசில், சிறுபுறமென நூருயிரங் காணங் கொடுத்து, நன்ரு என்னும் குன்றேறி நின்று

தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான் அக்கோ"

என்னும் உரை காணப்படுகிறது. 'நண்ணு என்னும் குன்று' என்பதையே எதுகை நோக்கியும், ஏட்டெழுத்தின் உருவ ஒப்புமை பற்றியும், ஏடு பெயர்த் தெழுதுவோர் 'நன்ரு என்னும் குன்று' என்று எழுதினர் போலும்.

சென்னிமலை, சிவமலை, பழனி, திருப்பரங் குன்றம், திருப்பதி, திருவண்ணுமலை என்னும் மலை களின் பெயர்களே அம்மலைகளின் அடிவாரத்தில் உள்ள ஊர்கட்கும் பெயர்களாய் வழங்கி வருதல் காண்க. நண்ணுமலைக்கு ஊராட்சிக் கோட்டை மலை என்பது பிற்காலத்தில் ஏற்பட்ட பெயராகும். நண்ணு என்பது, நணு என இடைக் குறையாகவும் வழங்கலானது. எனவே, நண்ணு என்னும் இம் மலையின் பெயரே, பவானிக்கு நண்ணுவூர், நணுவூர், திருநணு எனப் பண்டு வழங்கி வந்துள்ளது.

**வானி கூடல்:** வானி கூடல் என்பது பவானி யின் பழைய பெயர். வானியாறு காவிரி யாற்றுடன் கூடும் இடத்தில் பவானி என்னும் இவ்வூர் அமைந் திருப்பதால் இதற்கு 'வானி கூடல்' என்ற பெயர் ஏற்பட்டது. வானி யாறு பவானி யாறு எனத் திரித்து வழங்கப்பட்டபின், வானிகூடல் என்பது 'பவானிகூடல்' என வழங்கலானது. நாளடைவில் கூடல் என்பது விடுபட்டு, பவானி என்றே வழங்க லானது. இன்னும் இவ்வூர் அர்பன் பாங்கு, 'பவானி கூடல் அர்பன் பாங்கு' என்றே வழங்கி வருகிறது.

இவ்வூர் வெளிமுகத் துறைக்கு, 'பவானி கூடல் அவுட் ஏஜன்சி' என்பது பெயர்.

பவானி.யாற்றுக்கு வானி யாறு என்னும் பெயருண்மை,

''பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்
சாந்துவரு வானி நீரினும்
தீந்தண் சாயலன் மன்ற தானே''

(பதிற்றுப் பத்து-86)

எனக் கடைச்சங்க நூலான பதிற்றுப்பத்தில் வானி என்றே இவ்வாற்றின் பெயர் வழங்கப் பெற்றுள்ளது.

''குடகில் வருகா விரிபுகு வானிக் கொழுநாடு''

என, அவிநாசித் தலப்புராணத்திலும் இவ்வாறு வானி என்றே குறிக்கப்பட்டுள்ளது.

''வரைகொண்ட பூந்துறை நன்னாடு வாழ்கஅவ்
வானிதனைக்
கரைகொண் டடைத்தவன் வெள்ளோடைச் சாத்தந்தை
காளிங்கனே''

(தனிப்பாட்டு)

''எற்று திரைப்பொன்னி கூடுறு வானி யிடைமடங்க
வெற்றி மிகுந்த அதிவீர பாண்டிய வேந்தமைச்சன்
கற்ற வறிவினன் காளிங்க ராயன்செய் கால்கழிநீர்
உற்ற வனத்தை வளவய லாக வுயர்த்தியதே''

(தனிப்பாட்டு)

''காவிரி யோடு கலக்குறு வானியைக் கட்டணைநீர்
மாவிச யம்பெறு காளிங்க னுங்கொங்கு மண்டலமே''

(கொங்கு மண்டல சதகம்)

''சீர்கொண்ட பொன்னிநதி வானிஆன் பொருநையுஞ்
சேர்கொங்கு மண்டலத்தில்''

(கொங்கு மண்டல சதகம்)

என்பன காண்க.

காளிங்கராயன் கி.பி. 13-ஆம் நூற்றுண்டினன். கொங்குமண்டல சதக ஆசிரியர் 18-ஆம் நூற்றுண்டினர். எனவே, கடைச் சங்க காலத்திலிருந்து, 18-ஆம் நூற்றுண்டு வரையிலும் பவானியாற்றுக்கு வானியாறு என்னும் பெயரே வழங்கி வந்திருக்கிறது.

மேற்குத் தொடர்ச்சி மலைச் சாரலின் உயர்ந்த மேட்டு நிலத்தில் இருந்து சேரநாட்டை ஆண்டு வந்த சேர மன்னர்-வானவர் (புறநானூறு-36, 126) எனப் பெயர் பெற்றதுபோல, அம்மேற்குத் தொடர்ச்சி மலையின் உயர்ந்த இடத்தில் தோன்றி வரும் இவ்வாறு **வானி** எனப் பெயர் பெற்றது. வான் + இ — வானி. வான்-உயர்வு. இ-பெயர் விகுதி. பொன் + இ—பொன்னி என்பது போல.

கோவை நகர்க்குக் குழாய்த்தண்ணீர் கொண்டு வரும் ஆற்றின் பெயர் **சிறுவானி** என்பதும், பவானியாற்றுக்கு வானி என்னும் பெயருண்மைக்குச் சான்று பகரும்.

பவானியின் மேற்கில் 12 கல் தொலைவில் வானியாற்றின் இருகரையிலும் **கீழ்வானி, மேல்வானி** என்னும் ஊர்கள் இருப்பதும் இதற்குத் துணை செய்யும். கீழ்வானி-வானியாற்றின் கீழ்கரையில் உள்ள ஊர்; மேல்வானி - வானியாற்றின் மேல் கரையில் உள்ள ஊர் என்பது பொருள்.

"மலைமேவு மாயக் குறமாதின்
மனமேவு வாலக் குமரேசா
சிலைவேட சேவற் கொடியோனே
திருவாணி கூடல் பெருமாளே"

—(திருப்புகழ்)

என, வானிகூடல் என்னும் பெயரை, 16-ஆம் நூற்றுண்டினரான அருணகிரிநாதர் வழங்குவதால்,

மிக அண்மைக் காலம் வரை, பவானிக்கு - வானி கூடல் என்னும் பெயர் வழங்கி வந்துள தென்பது தெரிகிறது.

மேலும், பவானி வேத நாயகி கோயில் முன் மண்டபத்தில், "பார்த்திப ஆண்டு, தை மாதம், 20-ஆம் நாள், திருவாணி கூடல் பண்ணார் மொழி யம்மை (வேத நாயகி) முன் மண்டபம், இம்முடிக் கட்டி முதலியார் சின்னம்மாள் உபயம்" என்று பொறிக்கப்பட்டுள்ளது.



இம்முடிக் கட்டி முதலியார் சின்னம்மையார்

இச் சின்னம்மையார், இம்முடிக் கட்டி முதலி யாரின் மனைவியாராவர். இவ்விருவர் சிலைகளும் வேதநாயகி கோயில் முன்மண்டபத் தூண்களில் செதுக்கப்பெற் றுள்ளன.

"விக்கிரம வருடம், சித்திரை மாதம் ஸ்ரீமத் முதலியார் நல்லுடை யப்பா இம்முடிக் கட்டி முதலியார், நண்ணுவுடையார் சாமியாருக்கு, சுத்துத் திருநடை, மாளிகை, முன் நிருத்த மண்டபம், சிகரம், பண்ணுர் மொழியம்மை கர்ப்ப கிரகம், அர்த்த மண்டபம், மகர மண்டபம், ரங்கமண்டபம், குமாரும் கோயிலும் (குமாரர் கோயில்), யாகசாலை, வசந்த மண்டபம், கோபுரம், மதில், உயிர் லிங்கமும் பிரதிட்டை பண்ணினுர்"

சங்கமேச்சுரர் கோயில் முன்மண்டபத்தில் இக் கல்வெட்டு உள்ளது.

1672-ல் தொட்ட தேவராயன் என்னும் மைசூர் மன்னன், வணங்கா முடிக் கட்டி என்பவனை வென்று கட்டி நாட்டைக் கைக்கொண்டனன். இவ் வணங்காமுடிக் கட்டியே கட்டி மரபின் கடைசி அரசனுவான். இம்முடிக் கட்டி, இளமன் கட்டி, வேம்பன் கட்டி, மும்முடிக் கட்டி, சீயால கட்டி, வணங்காமுடிக் கட்டி என்னும் அரச மரபுப்படி, வணங்காமுடிக் கட்டி, இம்முடிக் கட்டியின் ஆருந் தலை முறையினன் ஆவான்.

1957 துன்முகி ஆண்டாகிறது. 1672-(1957-1672-260) விரோதிகிருது ஆண்டாகிறது. விரோதிகிருதுக்கு 31 ஆண்டுகட்கு முன்னது விக்கிரம ஆண்டு; விக்கிரம ஆண்டுக்கு கி. பி. (1672-31-) 1641. தலை முறைக்கு

20 ஆண்டாக, 5 தலை முறைக்கு (20×5) 100 ஆண்டு போக (1641—100-) 1541. இதுவே இம்முடிக் கட்டி முதலி திருநணுக் கோயில் கட்டி முடித்த ஆண்டாகும்.



கோயில் முன்கோபுரம்

சின்னம்மையார், பண்ணூர்மொழி யம்மை கோயில் முன் மண்டபம் கட்டினது ஐந்தாண்டுக்குப் பின்னர். அதாவது பார்த்திப ஆண்டு. அது (1541 + 5 = ) 1546-ஆம் ஆண்டாகும்.

எனவே, ஒரே காலத்தில் பவானிக்கு, வானி கூடல், திருநணு (நண்ணு) என்னும் பெயர்கள் வழங்கி வந்தன என்பது தெரிகிறது.

'பவானி கூடல்' என்பது 'பவானி' என வழங்குதல் போல, 'வானி கூடல்' என்பது 'வானி' எனவும் வழங்கிவந் திருக்கிறது என்பது,

"அந்தியூ ரும்பட்டி லூருங் குறிச்சிபூ
லாம்பட்டி சம்பை வானி"

(கொங்கு மண்டல சதகம்)

என்பதால் தெரிகிறது.

பவானி என்பது, பார்வதி பெயர்களிலொன்று. பிற்காலத்தே வானி என்னும் காரணப் பெயரை நீக்கி, காரணமில்லாத பவானி என்னும் பெயர் புகுத்தப்பட்ட தாகும்.

இந் நூலினுள்-திருநணு, வானி கூடல், பவானி என்னும் மூன்று பெயர்களும் பயில்கின்றதெனினும், இலக்கியப் பெயரும், பெரும்பான்மையும் பற்றித் 'திருநணுச் சிலேடை வெண்பா' என இந் நூற்குப் பெயரிடப் பெற்றது.

ஊரின் சிறப்பு: சென்னையிலிருந்து கள்ளிக் கோட்டை செல்லும் பெருவழியில், சேலத்திற்கு 36 கல் மேற்கில், காவிரியின் மேல்கரையில் திருநணு என்னும் பவானி இருக்கிறது. அப் பெருவழி பவானியின் இடையேதான் செல்கிறது. ஈரோடு

மேட்டூர் வழியும் நஞ்ஞூரின் நடுவேதான் செல் கிறது. ஈரோட்டின் வடக்கில் 10-வது கல்லில் உள் ளது பவானி. பவானியிலிருந்து கோவை 64 கல். ஊரின் கீழ்புறம் காவிரி யாறும், மேல்புறம் பவானி யாறும் வந்து, ஊரின் தென்புறத்தில் ஒன்று கூடு கின்றன. அவ் விரண்டாறுகளும் ஒன்று கூடும்



கூடுதுறை

இடமே கூடுதுறை எனப்படும். பவானியின் பெரு மைக்கும் சிறப்புக்கும் காரணமாய் அமைந்திருப்பது இக் கூடுதுறையே யாகும்.

சங்க காலத்தில் பவானிக்கு - கழார் என்னும் பெயர் வழங்கி வந்ததெனவும், கரிகால் வளவன் மகளான ஆதிமந்தியும், அவள் கணவனை ஆட்ட னத்தியும், இக் கழ்ரார்த் துறையில் நீராடும்போதுதான்

ஆட்டனத்தியைக் காவிரி கவர்ந்தது எனவும் ஆராய்ச்சியாளர் அறைகின்றனர். ஆட்டன் அத்தி-சேர மன்னன். இன்றும் ஆடி 18 அன்று மலையாளி கள் மிகுதியாக வந்து பவானிக் கூடுதுறையில் குளித்துச் செல்கின்றனர்.

காவிரி யாறு, பவானி யாறு இரண்டிலும் பாலங் கள் உள்ளன. ஊர்க்கு மேல்புறம், காளிங்கராயன்



காளிங்கராயன் அணை

என்னும் பெருமகனால் வானி யாற்றில் கட்டப் பெற்ற காளிங்கராயன் அணைக்கட்டும், அவ்வணையை அடுத்து அணைத் தோப்பும் உள்ளன. “அரங்கம் என்பது ஆற்றிடைக் குறையே” என்னும் திவாகரப் படி இவ் வணைத்தோப்பு ஒரு சிற்றரங்கம் ஆகும் (பாட்டு 57). காளிங்கராயன் அணைக்கட்டிலிருந்து காளிங்கராயன் வாய்க்கால் என்னும் கால்வாய், வானி

# பவானி




1. ஊரிநிலையம் (பஸ் ஸ்டாண்ட்) - பாட்டு 99.
2. உயர் நிலைப்பள்ளி - பாட்டு 10, 18.
3. கூற்றப் பணிமனை (தாலூக்கா ஆபீஸ்) பாட்டு 94.
4. உயர் நிலைப்பள்ளி மாணவரில்லம் - பாட்டு 62.
5. ஆலைகள் - பாட்டு 83, 103.
6. ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி - பாட்டு 31, 59, 82.
7. சுந்தரம் நூலாலை - பாட்டு 40.

யாற்றின் மேல்புறமாய் வளஞ் செய்துகொண்டு ஆற்றையடுத்துத் தெற்குநோக்கிச் செல்கிறது. இவ் வாய்க்காலின் மேல்புற நிலப் பரப்பைக் கீழ்பவானி வாய்க்கால் வளஞ் செய்கிறது. ஊரின் வடபக்கம் மேட்டூர் மேல்வாய்க்காலும், ஊரின் கிழபக்கம்-குமார பாளையத்தின் கிழபக்கம்-மேட்டூர்க்கீழ்வாய்க் காலும் வளஞ் செய்கின்றன.

ஊரின் கிழமேல் தெரு ஒவ்வொன்றுக்கும் காவிரி யாற்றில் படித்துறைகள் - படிக்கட்டுகள்-உண்டு. பவானியில் ஊர்முற்றும் படித்துறைகள் அமைந் திருப்பது போல, காவிரிக் கரையிலுள்ள வேறு எந்த ஊரிலும் அமையவில்லை.

தமிழ் நாட்டுப் பழவிறல் மூதூர்களில் பவானி யும் ஒன்ருகும். கி. பி. 7-ஆம் நூற்ருண்டினரான திருஞான சம்பந்தர் காலத்திற்கு முன்னரே இவ்வூர் தலச்சிறப்புடையதாய் இருந்திருப்பதால் இவ்வூரின் பழமையும் பெருமையும் இனிது விளங்கும். இன்று இது பவானிக் கூற்றத்தின் தலைநகராக உள்ளது. ஒரு காலத்தே பவானி, கட்டி நாட்டின் நாட்டாட்சிக் கோட்டைகள் பதினென்றில் ஒன்ருகத் திகழ்ந்தது. பின்னர் ஆங்கில ஆட்சியில் கோவைக் கோட்டமும் சேலங் கோட்டமும் ஒன்ருக இருந்த போது இது அதன் தலைநகராக விளங்கிற்று (பாட்டு-73). கோயிலும், கோயிலை அடுத்துள்ள தங்குமாளிகையும் (Travellers' Bungalow) கோட்டைக்குள் அமைந் துள்ளன. தங்குமாளிகை, முன்னர்க் கட்டி மரபினர் அரண்மனையாகவும், பின்னர்த் தண்டல் நாயக அலுவல்கமாகவும் (கலெக்டர் ஆபீஸ்) இருந்தது.

பவானி, யாத்திரைத் தலங்களுட் சிறப்புடைய தொன்றும். பவானிச் சமுக்காளம் உலகப் புகழ் பெற்றது.



தங்கு மாளிகை

தமிழ்ச் செய்யுள் மரபு நின்று நிலவவும், காலத்திற்கேற்ற புதிய கருத்துக்கள் நூல்வழக் கடையவும், இலக்கிய வளர்ச்சி யடையவும், தனித் தமிழ் இலக்கியந் தழைக்கவும் செய்தலே இந்நூல் செய்தற்குக் காரணமாகும். இந்நூல் ஓருரைப் பற்றிய தேனும், இதில் கூறப்படும் பொருள்களில் பெரும்பாலும் பொதுப்படையாகவே உள்ளமை யால் இது தமிழ் மக்கள் எல்லார்க்கும் உரிய பொது நூலேயாகும்.

இந்நூல் வெளிவரப் பொருளுதவி செய்த குமாரபாளையம் திரு. S. S. M. சுப்பிரமணியம் அவர்கட்கும், குமாரபாளையம் சுந்தரம் நூலாலைச் சொந்தக்காரரில் ஒருவரான திரு. J. K. K. சுந்தரராசன் அவர்கட்கும், படங்கள் உதவிய, பவானி ஆண்டவர் ரைஸ்மில் சொந்தக்காரர் திரு. T. K. இராமசாமிக் கவுண்டர் அவர்கட்கும், இந்நூலை அன்பளிப்பாக நன்கு அச்சிட்டுதவிய சென்னை, இராசன் எலக்ட்ரிக் பிரஸ் சொந்தக்காரர் அவர்கட்கும் எமது அன்பு கலந்த நன்றி உரித்தாகுக.

அன்புள்ள,

புலவர் குழந்தை.

## திருத்திப் படிக்க:

| பக்கம் வரி | | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|---|
| 17—13— (பாட்டு 24) | | தேயம | — | தேயம் |
| 18—28 | — | ஒக்கும் | — | ஒக்கும். |
| 25—10 | — | மிடம் | — | மிடம்- |
| 71—13 | — | ஓசூர் | — | ஓசூர், |
| ,, —15 | — | முன்னேற்றம் | — | முன்னேற்ற |
| 75—14 | — | கற்பிக்கும் | — | கற்பிக்கும்- |
| 77—22 | — | மன்றந்தாரை | — | மன்றத்தாரை |

# திருநணுச் சிலேடை வெண்பா

---

## பாயிரம்

1. **பொன்னிவாய் வானி புகுவானி கூடனணுப்
பன்னு பவானிவெண்பாப் பாடுதற்கு—மன்னுதமிழ்ச்
செஞ்சொல் மடக்குந் திரிபுஞ் சிலேடையுமென்
நெஞ்சில் உறுக நிறைந்து.**

பொன்னி - காவிரியாறு. வாய் - இடம். கூடல் நணு. பன்னுதல் - புகழ்தல், பாராட்டுதல். பொன்னிவாய் வானி புகு வானி கூடல் - காவிரியாற்றோடு வானியாறு கலக்கும் இடத்தில் இருப்பதால், பவானி **வானிகூடல்** எனப் பெயர் பெற்றது. வானிகூடல் பவானியின் பழம் பெயர். நணு பவானியின் இலக்கியப் பெயர். மன்னுதல் - நிலை பெறுதல். மடக்கு - வந்த சொல்லே வந்து பொருள் வேறுபடுதல். திரிபு-மடக்கின் முதலெழுத்து மட்டும் வேறு பட்டுப் பொருள் வேறுபடுதல். சிலேடை - பல்பொருட் சொற்றொடர். ஒரு சொற்றொடர் பலபொருட்கியைதல் சிலேடை எனப்படும். மடக்கும் திரிபும் - சொல்லணிகள். சிலேடை - பொருளணி. பாயிரம் - முகவுரை.

2. **பாடற் பனுவற் பயன்பா டுறவானி
கூடற் சிலேடைவெண்பாக் கூறுதற்குத்—தேடித்
திரியாம லெம்முளத்தே செம்பொருட மின்பந்
திரியாமற் சேர்க சிறந்து.**

பனுவல்-நூல். பயன்பாடு-பயன். உற-உண்டாக. பனுவல் பயன்பாடு உற-தமிழி லுள்ள தொண்ணூற் றறு வகைப் பனுவல்கள் போல இந்நூலும் மக்கட்குப் பயன்பட. செம்பொருள்-சிறந்த பொருள். தேடித் திரியாமல் செம் பொருள் தம் இன்பம் திரியாமல் எம் உளத்தே சேர்க எனக் கூட்டுக.

3. வானிக் கொடிபொன்னி மாவிற் படர்தருப
வானிச் சிலேடைவெண்பா மாலைகட்டத்—தேனிற்குஞ்
செந்தமிழ்நற் சொன்மலர்கள் செய்ய மணங்கமழ
எந்தனுளத் தேமலர்க வே.

வானி–வானியாறு. பொன்னி–காவிரியாறு. மா–மாமரம். படர் தரு–படர்கின்ற. வானிக் கொடி பொன்னிமாவில் படர்தல்–உருவகம். தேன் நிற்கும்–தேன் பொருந்தும். தேன்–தேன், இனிமை. செய்ய–நல்ல. உளம்–உளமாகிய குளம். இது ஒருகூற் றுருவகம்.

4. நாடற் கினியபுது நாகரிகம் போல்வானி
கூடற் சிலேடைவெண்பாக் கூறுகின்றேன்—நாடுபுகழ்
பொன்னித் தமிழ்வானி போலவளங் குன்றுமற்
கன்னித் தமிழ்நிலவு க.

நாடுதல்–ஆராய்தல். நாடு புகழ்–நாட்டினர் புகழ்கின்ற, புகழ் நாடுகின்ற பொன்னி என இருபொருள் கொள்க. தமிழ் என்பதைப் பொன்னி யோடுங் கூட்டுக. தமிழ்–இனிமை. 'பொன்னித் தமிழ்' என எதுகை நோக்கித் தகரம் மிக்கது. கன்னித் தமிழ்–இளமை நலம் குன்றுத தமிழ். நிலவுதல்–என்றும் இவ்வாறே இருத்தல்.

5. வண்டமிழ்ப்பா வாணர் மரபுத் தொடர்விளங்கத்
தண்டமிழ்நற் றுய்நற் றடந்தோட்கு—மண்டுமணிப்
பொன்மாலை சூட்டுகில்லேன் பொன்வானி கூடனுைச்
சொன்மாலை சூட்டுகின்றேன் சூழ்ந்து.

மரபுத் தொடர்–வழிமுறை. மண்டுதல்–நிரம்புதல். மணி–முத்து பவளம் முதலிய ஒன்பான் மணி. பொன்–அழகிய, செல்வம். சூழ்ந்து–ஆராய்ந்து. சூழ்ந்து சொல் மாலை சூட்டுகின்றேன் எனக் கூட்டுக. இவை ஐந்தும் பாயிரம்.

# நூல்

6. பூமருவுங் காவினிலும் பொன்மருவுங் கோவினிலுந்
தேமருவி நாறுந் திருநணு—தாமரைப்பூங்
கைப்பவள மெய்யார்தங் காதற் கணவருளங்
கைப்பவள மெய்யார்தங் காப்பு.

பூ மருவும் காவினில் தேம் மருவி நாறும்-பூக்கள் பொருந்தியுள்ள சோலையில் தேன் பொருந்தி மணக்கும். பொன் மருவும் கோவினில் தேம் அருவி நாறும்-பொன் பொருந்தியுள்ள மலையில் இனிய நீரருவி தோன்றும்.

மருவுதல்-பொருந்துதல். கா-சோலை. கோ-மலை. தேம்-தேன், இனிமை. நாறுதல்-மணத்தல், தோன்றுதல்.

தாமரைப் பூங் கை பவள மெய்யார்-தாமரை மலர் போன்ற கையையும் பவளம் போன்ற மேனியையும் உடைய மகளிர், காதல் தம் கணவர் உளம் கைப்ப வளம் எய்யார்-அன்புடைய தம் கணவர் மனம் வருந்தும்படி செல்வத்தை வீண் செலவு செய்யார்.

மெய்-மேனி-உடம்பு. கைப்ப-வருந்த, வெறுக்க. வளம்-செல்வம், வருவாய். எய்தல்-போக்குதல்-வீண் செலவு செய்தல். வளம் எய்யார்-குடும்பத்தின் செல்வ நிலையை-வருவாயை-அறியாமல் ஆடம்பரச் செலவு செய்யார்; வரவறிந்து செலவு செய்வார் என்பதாம். காப்பு-ஊர்.

தாமரைப் பூங்கை பவள மெய்யார் தம் காதல் கணவர் உளம் கைப்ப வளம் எய்யார் தம் காப்பு, 'காவினிலும் கோவினிலும் தேமருவி நாறும் திரு நணு' எனக் கூட்டிப் பொருள் கொள்க. பின்வரும் வெண்பாக்கட்கும் இவ்வாறே பொருள்கோள் கொள்க. (1)

**7.** ஆண்டா ரகமலரும் அன்னவயற் காவலருந்
தீண்டாமை போக்குந் திருநஞ—வேண்டா
தவையார்க்குஞ் செய்யார் தகவா னுயர்மூத்
தவையார்க்குஞ் செய்யார்தஞ் சார்பு.

ஆண்டார் அகமலர் தீண்டாமை போக்கும்-மேல் வகுப்பினர் மனம் தொடுவது தீட்டு என்னும் நம்பிக்கையை ஒழிக்கும். வயல் காவலர் தீண்டு ஆ மை போக்கும்-வயலைக் காப்பவர் நெற்பயிரைத் தின்ன வரும் மாடு ஆடு எருமை முதலியவற்றை ஓட்டும்.

ஆண்டார்-மேல் வகுப்பினர், உயர்குலத்தோர் எனப் படுவோர். அகமலர்-மனம். மை-ஆடு, எருமை.

வேண்டாதவை யார்க்கும் செய்யார்-தகாதவற்றை எவர்க்குஞ் செய்யார். தகவான் உயர் மூத்த அவை ஆர்க்கும் செய்யார்-தகுதி மிக்க பெரியோர் கூட்டத்தைப் பொருந்தும் நல்லவர். வேண்டாதவை யார்க்கும் செய்யாத நல்லவர்.

வேண்டாதவை-தகாதவை, கெட்டவை. தகவு-தகுதி. மூத்த அவை-பெரியோர் கூட்டம். தகவான் உயர் மூத்த அவை-தகுதி மிக்க பெரியோர் கூட்டம். ஆர்த்தல்-பொருந்துதல். செய்யார்-செம்மை யுடைவர், நல்லவர். சார்பு-இடம். வேண்டாதவை யார்க்கும் செய்யாதவரும், பெரியோரினத்தைச் சார்ந்திருப்பவரு மாகிய நல்லவர் தம் சார்பு என்க.

(2)

**8.** வந்தாரிற் செந்தமிழின் மாதுளையி னைந்தொகையின்
சிந்தா மணிசேர் திருநஞ—செந்தா
மரைவிரும்புங் கையார் மனைவிரும்புந் தந்த
மரைவிரும்புங் கையார் மனை.

(1) வந்தாரில் சிந்தாமணி சேர்-வந்திரந்தவரிடம் நிறைந்த செல்வம் பொருந்தும். தம்மை அடைந்த இரவலர்க்கு நிறையப் பொருள் கொடுப்பர் என்பதாம். சிந்தா

மணி-குன்றுத பொற்குவை. (2) தமிழில் சிந்து ஆம் அணி சேர்-தமிழில் சிந்து என்னும் அணிகலன் பொருந்தும். சிந்து-ஒருவ்வகைப் பாடல். காவடிச் சிந்து, நொண்டிச் சிந்து, வளையற்சிந்து என்பன காண்க. அணிகலன்-நகை. அணி-அழகுமாம். (3) மாதுளையில் சிந்தா மணி சேர்-மாதுளம் பழத்தில் நிறைய முத்துக்கள் (விதை) இருக்கும். மணி-விதை. (4) ஐந்தொகையில் சிந்தாமணி சேர்-ஐந்தொகையில் சிந்தாமணி என்னும் நூல் சேரும். ஐந்தொகை-ஐம்பெருங் காப்பியம். அவை-சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என்பன.

செந்தாமரை விரும்பும் கையார்-செந்தாமரை மலர் போன்ற கையையுடைய மகளிர், தம் மனை விரும்பும் தமரை விரும்பும் கையார் - தமது குடும்பத்தை விரும்பும் சுற்றத்தாரை விரும்பும் ஒழுக்க முடையார். கையை யுடைய ஒழுக்க முடைய மகளிர் என்க.

மனை-குடி-குடும்பம். தமர்-சுற்றத்தார். கை-ஒழுக்கம். கையார்-ஒழுக்க முடையார். மனை-வீடு; சினையாகு பெயராய் ஊரினை யுணர்த்திற்று. (3)

9. அட்டுணுகட் காவியரும் ஆய்ந்தெழுது மோவியரும்
வட்டிகை கொள்ளும்ப வானியே—கட்டியெயி
ணுப்பண் பொலியு நகர்மேய நல்லறமா
ணுப்பண் பொலியு நகர்.

அட்டு உணு கண் காவியர் வட்டி கைகொள்ளும்-உணவுண்ணும் மகளிர் வட்டிலைக் கையால் எடுப்பர். ஆய்ந்து எழுதும் ஓவியர் வட்டிகை கொள்ளும்-ஆராய்ந்து ஓவியம் எழுதும் ஓவியர் எழுதுகோலைக் கொள்வர்.

அட்டு-உணவு. கண் காவியர்-காவிமலர் போன்ற கண்ணை யுடைய பெண்கள். காவி-கருங் குவளை. வட்டி-வட்டில்-உண்கலம். ஓவியம்-சித்திரம். வட்டிகை-ஓவியம் எழுதுங் கருவி.

கட்டி எயில் நாப்பண் பொலியும் நகர் மேய-கட்டி மரபினர் கட்டிய கோட்டையின் உள்ளே விளங்குகின்ற கோயில் பொருந்திய. நல் அறம் ஆறு பண்பு ஒலியும் நகர்-நல்லறத்தினின்றும் நீங்காத பண்பாடு தழைக்கும் ஊர்.

கட்டி-கட்டி மரபினர். இக் கட்டி மரபினர், சேலங் கோட்டத்தி லுள்ள தாரமங்கலத்தை அடுத்த அமரகுந்தி என்னும் ஊரிலிருந்து, கடைச்சங்க காலத்திற்கு முன்னிருந்து கி.பி. 1672 வரை கட்டி நாட்டை ஆண்டுவந்த குறுநில மன்னராவர்.

"நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி
துன்னருங் கடுந்திறற் **கங்கன் கட்டி**"

(அகநானூறு-44)

"பங்களர் கங்கர் **பல்வேற் கட்டியர்**"

(சிலப் - 25 : 157)

எனக் காண்க.

கட்டி நாடு என்பது, வடக்கே-தகடூர் (தர்மபுரி); கிழக்கே-தொப்பூர், பொன்முடி, தலைவாசல்; தெற்கே-இராசிபுரம்; மேற்கே-வானியாறு; இவற்றை எல்லையாக உடைய நாடாகும்.

சிற்ப வேலைப் பாட்டில் ஒப்புயர்வற்ற, உலகப் புகழ் பெற்ற தாரமங்கலம் சிற்பக் கோயிலைக் கட்டியவர் இக்கட்டி மரபினரே யாவர்.

பவானிக் கோட்டை, கோயில், கூடுதுறைப் படிக்கட்டு, புக்கில் (T.B.) ஆகியவற்றைக் கட்டினவர் இக் கட்டி மரபினரே. இப்போதுள்ள கோயிலைக் கட்டினவன் இம்முடிக் கட்டி என்பான். முகவுரையில் உள்ள இவன் கல்வெட்டைப் பார்க்க.* பவானிக் கோட்டை, கட்டி நாட்டின் நாடாட்சிக் கோட்டைகள் பதினொன்றில் ஒன்றாகும்.

---

*பொதுமக்களின் நன்கொடையைக் கொண்டு, சங்கமேச்சுரர் கோயில் திருப்பணிக் குழுவினரால், இப்போது (1957ல்) சங்கமேச்சுரர் கோயில் பிரித்துப் புதிதாகக் கட்டப்பட்டுவருகிறது.

எயில் - மதில், கோட்டை. நாப்பண்-நடுவில். பொலி தல் - விளங்குதல். நகர் - கோயில். மேய - பொருந்திய. ஆறு-ஆறுத - நீங்காத. ஒலிதல் - தழைத்தல், மிகுதல். நகர் - ஊர். (4)

10. கஞ்சக் கழனியிலுங் கல்விபயில் பள்ளியிலுஞ்
செஞ்சொல் விளக்குந் திருநணு—வஞ்சிக்
கொடியனையார் வாழுங் குடியருக வஞ்சிக்
கொடியனையார் வாழுங் குடி.

கஞ்சக் கழனியில் செஞ்சொல் விளக்கும்-தாமரை பூத்த வயலில் நல்ல நெல்லை விளைவிக்கும். கல்வி பயில் பள்ளியில் செம்சொல் விளக்கும்-படிக்கின்ற பள்ளியில் செவ்விய சொற்களைக் கற்கும்.

கஞ்சம்-தாமரை. இது நீர் வளத்தைக் குறிக்கும். கழனி-வயல். சொல்-நெல், சொல். செஞ்சொல்-நல்ல நெல். 'செஞ்சாலி' எனல் காண்க. சாலி-நெல். சொல் லாகு பெயராய்ச் செவ்விய பொருளுங் கொள்க.

வஞ்சிக் கொடி அனையார் - வஞ்சிக்கொடிபோன்ற மக ளிர், வாழும் குடிஅருக அஞ்சிக்கொடு-தமது குடிப்பெருமை சுருங்குதற்கு அஞ்சி, இயல் நையார்-தன்மை குன்றுர், வாழும் குடி-வாழ்கின்ற ஊர்.

வஞ்சி-ஒருவகைக் கொடி. அஞ்சிக்கொடு-அஞ்சிக் கொண்டு-அஞ்சி. வாழும் குடி-தாம் உள்ள குடி-தமதுகுடி. அருகுதல்-சுருங்குதல். தன்மை-பெண் தன்மை. நைதல்-குன்றுதல். தாம் பெண்டன்மை குன்றினுல் தமது குடிப் பெருமை குன்றுமென் றஞ்சிக் குலமகளிர் பெண்டன்மை குன்றுர் என்பதாம். குடி-ஊர். (5)

11. தாதார் கருங்குயிலுஞ் சங்கத் தமிழியலுஞ்
சேதாரம் பாடுந் திருநணு—மாதேநற்
பாளையம் பட்டியெனுப் பண்பாருர் சூழ்நகர்காப்
பாளையம் பட்டியெனுப் பற்று.

தாது ஆர் கருங்குயில் சேதாரம் பாடும் - பூந்தாதை உண்ணும் கருங்குயில் தேமா மரத்தில் பாடும். சங்கத் தமிழ் இயல் சே தாரம் பாடும் - சங்கமருவிய தமிழ்ப் பாட்டுக்களைச் செவ்விய நாவினுல் பாடும்.

தாது - பூந்தாது - மகரந்தம். ஆர்தல்-உண்ணுதல். தமிழ்இயல்-தமிழ்ப்பாட்டு. சேதாரம்-தேமாமரம். தாரம்-நா.

மாதேம் நல்-பெரிய இடமுடைய நல்ல.பாளையம் பட்டி எனு பண்பு ஆர் ஊர் சூழ்-பாளையம் பட்டி என்னும் பெயர்களை யுடைய அழகு பொருந்திய ஊர்கள் சூழும். எனு-என்னும். பண்பு-அழகு. நகர்காப்பாள் ஐயம்பட்டு இ எனு பற்று-ஊர்க்காவலன் ஐயுற்று 'இ ! யாரது ?' என்னுத ஊர்.

தேம்-இடம். இ-ஒலிக் குறிப்பு. பற்று-இடம்-ஊர். இங்ஙனம் திருடர் முதலியோர் இல்லாத ஊர் என்பதாம்.

பாளையம் - குமாரபாளையம், சின்னப்ப நாய்க்கன் பாளையம், காளிங்கராயன் பாளையம், பெருமா பாளையம், மாரப்பம் பாளையம், பூலப்பாளையம், அய்யம் பாளையம், மூலப் பாளையம், கரையெல்லைப் பாளையம், விருமாண்டம் பாளையம், வளையக்கார பாளையம், தயிர்ப் பாளையம், மோழ பாளையம், சீத பாளையம், திப்பிசெட்டி பாளையம், சேர்வை காரன் பாளையம், தொட்டிய பாளையம், குறுப்ப நாய்க்கன் பாளையம் முதலியன. பட்டி-காடையாம்பட்டி. ஊர்-பெரிய புலியூர், சின்னப் புலியூர் முதலியன. ஐம்பை முதலிய வேறு பெயருள்ள ஊர்களுங் கொள்க. (6)

12. தாய்க்குத்தா யாளுருந் தண்கதலி யின்றுருஞ்
சேய்க்குத்தா லாட்டுந் திருநணு--நோய்க்கு
மருந்தனையர் மேவு மனைமகிழ நன்க
மருந்தனையர் மேவு மனை.

தாய்க்குத் தாய் ஆனுர் சேய்க்குத் தாலாட்டும்-பாட்டியர் குழந்தைக்குத் தொட்டிலாட்டும். தண் கதலியின் தார்

சேய் குத்தால் ஆட்டும்-குளிர்ச்சி பொருந்திய வாழைக்குலை பக்கக் கன்று குத்துதலால் ஆடும்.

தாய்க்குத் தாயானர் - பாட்டியர். தண்-குளிர்ச்சி. கதலி-வாழை. தார்-குலை. ஆட்டும் என்னும் பிறவினை ஆடும் எனத் தன்வினைப் பொருள் தந்தது. கன்று குலையில் முட்டுதலால் குலை மரத்தை ஆட்டும் என்றுமாம்.

நோய்க்கு மருந்து அனையர்-நோய்க்கு மருந்து போன்ற வர். மேவும் அனை மகிழ நன்கு அமரும் தனையர் மேவும் மனை-விரும்புகின்ற தாய் மகிழும்படி நன்கு அடங்கி நடக் கும் மக்கள் பொருந்தும் ஊர்.

மேவுதல்-விரும்புதல். அமர்தல்-அடங்கி நடத்தல். தனையர்-மக்கள். மேவுதல்-பொருந்துதல்-வாழ்தல். நோய்க்கு மருந்துபோல் தாயின் துயர் தீர்ப்பவரும், தாய் மகிழும்படி அடங்கி நடப்பவரும் ஆகிய மக்கள் வாழும் ஊர் என்க. மனை-ஊர். (7)

13. நாட்டைவளம் பண்ணுநரு நற்றெளிநீ ருண்ணுநருங்
கோட்டைகட்டு வார்வானி கூடலே--ஏட்டுப்
படிப்பகத் திற்படுப்பார் பன்னூற் பயனைப்
படிப்பகத் திற்படுப்பார் பற்று.

நாட்டை வளம் பண்ணுநர் கோடுஐ கட்டுவார்-நாட்டை நீர்வளமுறப் பண்ணுவார் ஏரி குளங்களின் கரைகளை உயர் வாகக் கட்டுவர். நல் தெளிநீர் உண்ணுநர் கோட்டை கட்டு வார்-தென்னை பனையின் நல்ல தெளிவு குடிப்போர் பனை யோலையால் கோட்டை கட்டுவர்.

கோடு-கரை. ஐ-உயர்வு. தெளிநீர்-பதனி. கோட் டை-பச்சைப் பனையோலையால் கட்டிய தெளிநீர் குடிக்கும் கலம்.

ஏட்டுப் படிப்பு அகத்தில் படுப்பார்-பள்ளியில் படிப்பவர் கள், நூல்களைப் படிக்க விரும்புவோர். பல் நூல் பயனை-பல

நூல்களில் உள்ள பொருள்களை-கருத்துக்களை. படிப்பகத்தில் படுப்பார்-வாசக சாலையில் அடைவார்கள்.

படிப்பகம் எனவே, நூலகமும் அடங்கும். பவானியில் கோவைக் கோட்ட நூலகக் கிளை நூலகமும் படிப்பகமும், திருமேனி படிப்பகமும் உள்ளன. பற்று-இடம், ஊர். (8)

**14.** **மெய்ந்நின்ற வாழ்வினரும் மேழிக் கொடியினருஞ்**
**செய்ந்நன்றி மாறுத் திருநணு-குய்ந்நின்**
**றெழும்புகை யில்லா ரெனினுந்தம் மின்னின்**
**றெழுப்புகை யில்லா ரிருப்பு.**

மெய்நின்ற வாழ்வினர் செய்நன்றி மாறு-உண்மை வாழ்வு வாழ்வோர் பிறர் செய்த உதவியை மறவார். மேழிக் கொடியினர் செய் நன்றி மால் தா-உழவர்கள் வயலினது பயனை மிகுதியாகக் கொடுப்பர்; மிகுதியாக விளைவிப்பர் என்பதாம். உண்மை வாழ்வு-வையத்துள் வாழ்வாங்கு வாழ்தல்.

குய் நின்று எழும் புகை இல்லார் எனினும்-தாளிப்பி லிருந்து மேலே எழுகின்ற புகை இல்லாத வறியவர் என்றாலும். தம் இல் நின்று எழும்புகை இல்லார் இருப்பு-தம் வீட்டை விட்டு இரத்தற்குப் புறப்படாதவர் ஊர்.

குய்-தாளிப்பு. குய் நின்று எழும் புகை இன்மை-அடுப்பில் தீமூட்டாத அத்தகு வறுமை.

மிக்க வறுமையுற்ற போதினும், அதாவது சோற்றுக்கு இல்லாத போதினும் பிறரிடம் ஏற்றுண்ணுதற் பொருட்டு வீட்டை வீட்டுப் புறப்படார் என்பதாம். இருப்பு-ஊர். (9)

**15.** **தாயரொளி மிக்கணியுந் தண்டமிழ றப்பணியுஞ்**
**சேயருக்குச் செய்யுந் திருநணு--தூய**
**மலர்மாலை கட்டுவார் வாழ்த்தவய றூற்று**
**மலர்மாலை கட்டுவார் வைப்பு.**

தாயர் சேயருக்கு ஒளிமிக்க அணி செய்யும்-தாயர் மக்களுக்கு ஒளி பொருந்திய அணியணிந்து அழகு செய்யும். தமிழ் அறப்பணி சேயருக்குச் செய்யும்-தமிழறத்தைப் பரப்புந் தொண்டைத் தொலைவி லுள்ளவர்க்குச் செய்யும்.

சேயர்-மக்கள். தண்தமிழ்-குளிர்ச்சி பொருந்திய தமிழ். குளிர்ச்சி-எளிமையும் இனிமையும். சேயர்-தொலைவிலுள்ள பிறமொழியினரும், அயல் நாட்டினரும்.

அயல் தூற்றும் அலர் மாலை கண் துவார்-ஊர்மகளிர் தூற்றுகின்ற அலரினல் இரவில் தூங்கார்.

அயல்-ஊர்மகளிர். அலர்-களவொழுக்கத்தைப் பற்றி ஊர் மகளிர் பேசுதல். தூற்றுதல்-பலரறியச் சொல்லுதல். துவார்-துவ்வார்-தூங்கார். வைப்பு-ஊர்.

அலருக் கஞ்சிய அவர் அறத்தொடு நிற்பர். அதனுல் விரைவில் திருமணங் கூடும். இதுகாறும் மலர் மாலை வாங்கி யணிந்து வந்தவ ராகையால், இனி மணமாலை யணிந்து பொலிவர் என்னும் கருத்தால், மலர்மாலை கட்டுவார் வாழ்த்தினரென்க. அறத்தொடு நிற்றல்-உண்மை யுரைத்தல். அதாவது தாங்கொண்ட காதலை வெளியிடுதல். (10)

16. மேவாரத் தாரகமு மெய்க்கா தலர்முகமுந்
தேவாரம் பாடுந் திருநணு—மாவீழும்
பூவைகுழ லார்பாடும் போதுநரம் பார்கிளியார்
பூவைகுழ லார்பாடும் போது.

மே வாரத்தார் அகம் தேவாரம் பாடும்-மேன்மையான அன்பர் கூட்டம் மூவர் தேவாரப் பாடலைப் பாடும். மெய்க் காதலர் முகம் தே வார் அம்பு ஆடும்-உண்மைக் காதலர் முகங்களில் தேனெழுகும் பூப்போன்றதும் அம்பு போன்றதுமான கண்கள் ஆடும்.

மே-மேன்மை. வாரம்-அன்பு. அகம்-கூட்டம். இங்கு சைவ அன்பர் கூட்டம். தே-தேன். வார்தல்-ஒழுகுதல்.

ஆடுதல்-உள்ளக் குறிப்பைக் குறித்துக் காட்டுதல்; 'கண்ணொடு கண்ணிணை நோக்கொத்தல்' (குறள்-1100)

மா வீழும் பூவை குழலார் பாடும்போது-வண்டுகள் விரும்புகின்ற பூச்சூடுகின்ற கூந்தலையுடைய பெண்கள் பாடுகின்றபோது. நரம்பார் குழலார் கிளியார் பூவை பாடும்-நரம்புக் கருவியும் குழலும் கிளியும் பூவையும் பாடும்.

மா-வண்டு. வீழ்தல்-விரும்புதல். நரம்புக்கருவி-வீணை, கின்னரம் (வயலின்) முதலியன. குழல்-புல்லாங்குழல் முதலியன. பூவை-மைனு என்னும் பறவை. போது-எழில்மிக்க இடம்.

மகளிர் குரல், வீணை முதலிய நரம்புக் கருவியின் ஓசை போலவும், குழலோசை போலவும் இனிமையாக இருக்கும். இவர் பாடுவது அவை பாடுவது போலவே இருக்கும் என்பதாம்.

பெண்கள் பாடும்போது, நரம்பு குழல் முதலிய பின்னணிக் கருவிகள் இசைக்கப்படும்; அவர் பாடுவதைக் கேட்டுக் கிளியும் பூவையும் பாடும் எனினுமாம். (11)

17. வீடுதொறும் வாணொலியும் மேலோர் நலம்பொலியும்
பாடிமகிழ் பூட்டும் பவானியே—கூடுதுறை
யாடுந ருடா னடும்போட்டி யிற்களைப்பை
யாடுந ருடா னகம்.

வீடுதொறும் வாணொலி பாடி மகிழ்பு ஊட்டும்-வீடுகள் தோறும் வா னொ லி பாடி மகிழ்ச்சியை யுண்டாக்கும். மேலோர் நலம்பொலியும் பாடி மகிழ் பூட்டும்-மேன்மக்கள் நன்மை மிக்க ஊரினர் கள்ளுண்டலைத் தடுக்கும்.

மகிழ்பு-மகிழ்ச்சி. நலம் பொலியும்-நன்மை மிக்க. பாடி-ஊர். இங்கு இடவாகு பெயராய் ஊரிலுள்ள குடியரைக் குறித்தது. மகிழ்-கள், கள்ளுண்டு களித்தல். பூட்டுதல்-தடுத்தல், நீக்குதல்.

கூடுதுறை ஆடும் நல் நாள்தான்-உவா (அமாவாசை), கிரகணம், ஆண்டுப் பிறப்பு, தலையாடி, ஆடிப் பதினெட்டு, ஐப்பசி போன்ற நன்னாட்களில் மக்கள் வந்து கூடுதுறையில் குளிப்பர். ஆடுநன் அடும் போட்டியில் களைப்பை நாடான்-விளையாடுவோன் வெற்றிபெறும் போட்டி விளையாட்டில் களைப்பைப் பொருட்படுத்தான். அடுதல்-வெற்றி பெறுதல். அகம்-இடம். கூடுதுறை-காவிரியுடன் வானியாறு கூடும் இடம். (12)

**18. பிள்ளையறி யாமையையும் பெய்புலத்துத் தீமையையும்**
**பள்ளி களையும் பவானியே—தெள்ளுதமிழ்க்**
**கட்டி யெடுத்துவைப்பார் கட்டத்தி லார்க்குணவுக்**
**கட்டி யெடுத்துவைப்பார் காப்பு.**

பிள்ளை அறியாமையை பள்ளி களையும்-இளமைப் பருவத்தின் அறியாமையைப் பள்ளிக்கூடம் போக்கும். பெய்புலத்துத் தீமையை பள்ளி களையும்-நாற்றுநட்ட வயலிலுள்ள புல்லைப் பள்ளன் மனைவி பிடுங்கி யெறியும்.

பெய்புலம்-நாற்று நட்ட வயல். பெய்தல்-நடுதல். புலம்-வயல். தீமை-புல்; பயிர்க்குத் தீங்கு செய்வது. பள்ளி-பள்ளிக்கூடம், பள்ளன் மனைவி. பள்ளர்-வயலுழுவோர், மருதநில மக்கள். களைதல்-நீக்குதல்.

தெள்ளு தமிழ் கட்டி எடுத்து வைப்புஆர் கட்டத்தில்-தமிழ் மகனாகிய கட்டி மரபினன் கட்டிய கூடுதுறையில், இலார்க்கு உணவுக்கட்டி எடுத்துவைப்பார்-ஏழைகளுக்குச் சோறு போடுவார்.

எடுத்தல்-கட்டுதல்; புது வீடெடுத்தல் எனக் காண்க. வைப்பு ஆர்-வைத்தல் பொருந்திய, வைத்த. வைப்பு-வைத்தல்; தொழிற்பெயர். எடுத்துவைத்தல்- எடுத்தல். கட்டம்-நீராடுந்துறை, படித்துறை. இங்கு கூடுதுறை. சிறப்பு நாட்களில் கூடுதுறையில் ஏழைகளுக்குச் சோறுக்கிப் போடுவர். காப்பு-ஊர். கட்டி மரபினர் வரலாற்றை 9-ஆம் பாட்டுரையில் காண்க. (13)

19. வையாருஞ்சொற்குவையை வாய்நாறும் பாற்சுவையைச்
செய்யா னளிக்குந் திருநணு—செய்யா
நகைக்கடையார் செல்வ நலங்காணப் பூணு
நகைக்கடையார் செல்வ நகர்.

வை ஆரும் சொல் குவையைச் செய்யான் அளிக்கும்-வைக்கோலிற் பொருந்திய நெற்பொலியை நிலத்துக்குடையவன் உதவும். வாய் நாறும் சுவைப் பாலைச் செய் ஆன் அளிக்கும்-வாய் மணக்கும் சுவையுடைய பாலை நிலத்தில் மேயும் மாடுகள் கொடுக்கும்.

வை-வைக்கோல். ஆர் - பொருந்திய. சொல் - நெல். குவை - பொலி - குவியல். நாறும்-மணக்கும். பால்சுவை-சுவைப்பால். செய்-நிலம். ஆன்-மாடு.

செய்யா நகைக்கு அடையார்-பிறர் பழிக்கும்படி நடந்து கொள்ளார்; கெட்ட வழியில் நடவார். செய்யா நகை-சிரிப்பு, பழிப்பு. இது வெளிப்படை. செல்வம் நலம் காணப் பூணும்-தமது செல்வச் சிறப்பைப் பிறர் காணும் பொருட்டு அணியும். நகைக்கடை ஆர் நகர்-நகைக் கடைகள் பொருந்திய ஊர். (14)

20. பொற்புடம்பு மேவியரும் போதுநிழ லோவியரும்
நற்படம்பி டிக்குமொளிர் நண்ணுவே—சொற்படும்புல்
வாய்ப்பேசி மீக்கூர்வார் வாய்வாய்த் தொலைப்பேசி
வாய்ப்பேசி மீக்கூர்வார் வாய்.

பொற்பு உடம்பு மேவியர் நற்பு அடம்பு இடிக்கும்-அழகிய உடல் பொருந்திய சிறுமியர் நன்கு அடம்பை இடிப்பர்; போது நிழலோவியர் நல் படம் பிடிக்கும்-அழகிய படம் பிடிப்போர் நன்கு படம் பிடிப்பர்.

பொற்பு-அழகு. நற்கு - நன்கு. அடம்பு - ஒருவகைக் கொடி. இதன் இலையை இடித்துப் பொடியாக்கி அழுக்குப் போக உடம்புக்குத் தேய்த்துக் கொள்ளுதல் உண்டு. போது-அழகு. நிழலோவியர்-போட்டோக் கிராப்பர். ஒளிர் நண்ணு-விளங்குகின்ற திருநணை.

பவானியில்-அஜந்தா போட்டோ ஸ்டுடியோ, கிருஷ்ணு போட்டோ ஸ்டுடியோ, ஜெயம் போட்டோ ஸ்டுடியோ என்னும் மூன்று நிழலோவியச் சாலைகள் உள்ளன.

சொல்படும் புல்வாய்ப்பு ஏசி மீக்கு ஊர்வார்-புகழ் கெடுதற் கேதுவான புல்லிய பேற்றை இகழ்ந்து உயர்வான செயலையே மேற்கொள்வார். வாய்வு ஆய்-வாய்ப்பாக-நன்கு. தொலைப் பேசி வாய் பேசி மீக்கூர்வார்- தொலைப் பேசி மூலம் பேசி மேம்படுவார்.

சொல்-புகழ். படுதல்-கெடுதல். புல்வாய்ப்பு-புல்லிய பேறு. வாய்ப்பு-பேறு, உறுபயன். ஏசுதல்-தீய பயனுறும் செயலினை இகழ்ந்து, செய்யாமை. மீ-உயர்வு. ஊர்தல்-மேற்கொள்ளுதல். வாய்வு-நன்கு. தொலைப் பேசிவாய்-தொலைப்பேசியின் மூலம். தொலைப்பேசி-டெலிபோன். மேம்படுதல்-வணிகத்துறையில் மேம்படுதல். வாய்-இடம். (15)

**21.** **தாடருமேம் பாடுஞ் சமுக்காளப் பண்பாடும்**
**நாடுமேற் கொள்ளு நணுவூரே—கூடுதுறை**
**யாடிக் களிப்பா ரருளொடுசெல் வார்க்காலை**
**யாடிக் களிப்பா ரகம்.**

தாள் தரும் மேம்பாடு நாடுமேல் கொள்ளும்-முயற்சியால் உண்டாகும் மேன்மையை ஆராயின் மேற்கொள்ளும். அதாவது முயற்சியால் உண்டாகும் மேம்பாட்டினை ஒருவர் ஆராய்ந்தறிந்தால் அம்முயற்சியை மேற்கொள்ளும் என்பதாம். தாள்-முயற்சி. சமுக்காளப் பண்பாடு நாடு மேற்கொள்ளும்-சமுக்காளத்தின் தொழிற்றிறமைச் சிறப்பினை நாட்டினர் மேன்மையாகக் கொண்டு பாராட்டுவர். நாடு-உலக நாடுகள். பண்பாடு-நல்ல வேலைப்பாடு, தனிச் சிறப்பு. பவானிச் சமுக்காளம் உலகப் புகழ் பெற்றது.

கூடுதுறை ஆடிக் களிப்பார்-கூடுதுறையில் குளித்து மகிழ்வார். செல்வார்க்கு அருளொடு ஆலையாடு இக்கு அளிப்பார்-வழிச் செல்வார்க்கு அருளினால் ஆலையாடுகின்ற

கருப்பஞ்சாறு வழங்குவர். இக்கு-கரும்பு. கரும்புச் சாற் ரோடு கரும்புங் கொடுப்பர். அகம்-இடம். (16)

22. இலகுறுநல் வாழ்நருங்கொய் தீர்தச் சருஞ்செய்
பலகைத் தொழிலார் பவானி—உலகவழக்
கைக்கடையார் வாய்மை கலவார் விரும்புமளி
கைக்கடையார் வாய்மைக் களம்.

இலகுறு நல் வாழ்நர் செய் பல கைத்தொழில் ஆர்-விளங்குகின்ற நல் வாழ்வினை யுடையார் செய்யும் பலவகைப் பட்ட கைத்தொழில்கள் பொருந்தும். கொய்து ஈர் தச்சர் செய் பலகைத் தொழில் ஆர்-செதுக்கியும் அறுத்தும் தச்சர் செய்யும் மரத்தொழில்கள் பொருந்தும்.

இலகுதல்-விளங்குதல். இலகுறு நல்வாழ்வு-மேம்பா டான சிறந்த வாழ்வு. கொய்தல்-வெட்டுதல், செதுக்குதல். ஈர்தல்-அறுத்தல், துளைத்தல். பலகை-பலகை, மரம்.

உலக வழக்கை கடையார்-உலக வழக்கைக் கெடுக் கார். வாய் மை கலவார்-சொல்லின்கண் குற்றங் கலவார். வாய்மை விரும்பும் மளிகைக் கடையார் களம்-உண்மையை விரும்புகின்ற மளிகைக் கடைக்காரர் வாழும் இடம்.

உலக வழக்கு-உயர் குடி மக்கள் ஒழுகும் ஒழுக்கம். கடைதல்-தேய்த்தல், கெடுத்தல். வாய்-வாக்கு-சொல். மை-குற்றம். வாய்மை-உண்மை. மளிகைக் கடை-பல சரக்குக் கடை. களம்-இடம். (17)

23. கமஞ்சூலுங் கண்ணயலுங் கண்டு கதழ்ந்து
ஞமலி யகவு நஞ்ஞவே—அமிழ்தங்
கசக்குந் தமிழ்ச்சொல்லார் காதுங் கருத்துங்
கசக்குந் தமிழ்ச்சொல்லார் காப்பு.

கமஞ்சூல் கண்டு கதழ்ந்து ஞமலி அகவும்-முகிலைக் கண்டு விரைந்து மயில் ஆடும், கண் அயல் கண்டு கதழ்ந்து ஞமலி அகவும்-வருகின்ற அயலாரைக் கண்டு விரைந்து நாய் குலைக்கும்.

கமஞ்சூல் - முகில். கண் அயல் - வருகின்ற அயலார். கதழ்ந்து - விரைந்து. ஞமலி - மயில், நாய். அகவல் - ஆடுதல், அழைத்தல் - குலைத்தல்.

அமிழ்தம் கசக்கும் தமிழ்ச் சொல்லார் - பாலும் ஒப்பா காத இனிமையான சொல்லையுடையார். காதும் கருத்தும் கசக்கும் தமிழ் சொல்லார் - கேட்போர் காதும் கருத்தும் வெறுக்கும்படியான கொச்சைத் தமிழ் பேசமாட்டார்.

அமிழ்தம் - பால். கசத்தல் - ஒப்பாகாமை; சொல்லின் இனிமை பாலுக் கின்மை. தமிழ் - இனிமை. கசத்தல் - வெறுத்தல். கசக்கும் தமிழ் - கொச்சைத் தமிழ். 'தமிழ் சொல்லார்' என்பது இயல்பின் விகாரம். காப்பு-ஊர். (18)

24. பாயங் கயல்வளமும் பட்டுநூற் கம்பளமுந்
தேயம புகழுந் திருநணு—நேயம்பு
கட்டிவளஞ் செய்வார் களைகளைந்து காவெனணை
கட்டிவளஞ் செய்வார் களம்.

பாய் அம் கயல் வளம் தேய் அம்பு உகழும் - நீந்து கின்ற அழகிய கெண்டை மீன் கூட்டம் குறைந்த நீரில் துள்ளும். பட்டு நூல் கம்பளம் தேயம் புகழும் - பட்டாலும் பருத்தி நூலாலும் நெய்யப்படும் சமுக்காளம் உலகம் புகழும்.

பாய்தல் - நீந்துதல். அம் - அழகிய. கயல் - கெண்டை மீன். கம்பளம் - சமுக்காளம். தேய்தல் - குறைதல். அம்பு - நீர். உகளுதல் - துள்ளுதல். உகள்-உகழ்-போலி.

நேயம் புகட்டி - பயிர்த் தொழிலின்மீது அன்புண்டா கும்படி அறிவுரை கூறி. செய் வளம் வார் - நிலத்திற்கு நன்கு எருப் போடு. களை களைந்து காஎன - புல்லில்லாமல் களைந்து, நோயணுகாமலும், ஆடுமாடுகள் தின்னாமலும் காவல் செய் என்று கூறி. இது அணை கட்டி வளஞ் செய்வார் கூற்று. அணை கட்டி வளம் செய்வார் - ஆற்றில் அணை கட்டி நீர்வளம் உண்டாகும்படி செய்வார். இது பவானிக் கருகில் வானி யாற்றில் கட்டப்பட்டுள்ள காளிங்கராயன் அணையைக் குறிக்கும். 57-ஆம் பாட்டுரை பார்க்க.

நேயம் - அன்பு. வளம் - எரு. செய் - நிலம். செய் வார்-கால வழுவமைதி. களம் - இடம். (19)

**25.** மாலையறு வைக்கடையில் வாவியுள்ளா னீர்க்கிடையிற்
சேலை யெடுக்குந் திருநணா—நூலை
யிழைத்துப் பிழைப்பா ரெனினுமில் லோர்க்குக்
கழைத்துப் பிழைப்பார் களம்.

மாலை அறுவைக் கடையில் சேலை எடுக்கும் - வரிசையாக உள்ள துணிக் கடையில் துணிகள் வாங்குவர். வாவி உள்ளான் நீர்க்கிடையில் சேலை எடுக்கும் - பாய்ந்து மீன் கொத்திப் பறவை நீர்நிலையில் கெண்டைமீனை எடுக்கும்.

மாலை - வரிசை. மாலை வேளையுமாம். அறுவை - ஆடை. அறுவைக் கடை - துணிக் கடை (ஜவுளிக் கடை). வாவுதல் - பாய்தல். உள்ளான் - மீன்கொத்திப் பறவை. சேல் - கெண்டை மீன்.

நூலை இழைத்துப் பிழைப்பார் எனினும் - நூல் சுற்றிப் பிழைப்பாராலும். இல்லோர்க்கு கழை துப்பு இழைப்பார்- ஏழைகட்குக் கரும்பு போன்ற இனிய உணவை இடுவர்.

நூல் இழைத்தல் - தாறுச் சுற்றுதல். கழை - கரும்பு; இனிமைக்கு எடுத்துக் காட்டு. துப்பு-உணவு. இழைத்தல்- இடுதல். எளிய வாழ்வு வாழினும் தம்மிடம் வந்த ஏழைகட்கு நல்லுணவிட்டுப் போற்றுவர் என்பதாம். இது குடிப் பிறந்தார் பண்பு. 105-ஆம் பாட்டைப் பார்க்க. களம் - இடம். (20)

**26.** குழந்தைவிளை யாட்டாருங் கூடுதுறை யூரும்
பழந்தமிழ்நா டொக்கும் பவானி—செழுந்தமிழ்மேம்
பாட்டுக் குழைப்பார் பசும்பொடியை யெண்ணெய்தேய்ப்
பாட்டுக் குழைப்பார் பதி.

குழந்தை விளையாட்டு ஆர் பழம் தமிழ் நாடு ஒக்கும் - இளங் குழந்தைகள் விளையாடுதல் பழத்தின் இனிமையை நாடுதலை ஒக்கும். கூடு துறை ஊர் பழந்தமிழ் நாடு ஒக்கும்- ஒன்று கூடும் இரண்டாறுகளும் பவானியும் பழந்தமிழ் நாட்டை ஒக்கும்.

விளையாட்டு ஆர்-விளையாடல். கூடுதுறை-ஒன்று கூடும் இரண்டாறுகள்; வானியும் பொன்னியும். துறை - ஆறு. ஊர் - பவானி.

இளங் குழந்தைகள் பொம்மை முதலிய பொருள்களை எடுத்தும் வாயில் வைத்தும் எறிந்தும் விளையாடும். அது பழத்தை எடுத்து மோந்து பார்த்தும் சுவைத்துப் பார்த்தும் நல்ல பழங்களைத் தேர்ந்தெடுத்தலை ஒக்கும். தமிழ் - இனிமை, நன்மை.

ஊரின் இரு பக்கமும் வந்து இரண்டாறுகள் கூடும் தோற்றம் பழந்தமிழ் நாட்டைப் போலும். பழந்தமிழ் நாடு - கடைச் சங்க காலத்துக்கு முன்னர், மலையாள நாடு சேர நாடாக இருந்த தமிழ் நாடு. அப்பழந் தமிழ் நாடு மூன்று பக்கமும் கடல் சூழ இருந்தது போலவே, பவானி மூன்று பக்கமும் ஆறு சூழ அமைந்திருக்கிறது.

தமிழ் மேம்பாட்டுக்கு உழைப்பார் - தமிழின் மேன்மைக்கு - வளர்ச்சிக்கு - பாடுபடுவார். பசும்பொடியை எண்ணெய் தேய்ப்பு ஆட்டுக் குழைப்பார் - அரைப்பை எண்ணெய் தேய்த்து நீராடக் கரைப்பார்.

பசும்பொடி - அரைப்பு. சீக்காய்த்தூள், பாசிப்பயிற்றுமா முதலியனவுங் கொள்க. ஆட்டு - ஆட. பதி - ஊர். (21)

27. வற்று மழைநீரும் மாவிடையும் பாவிடையுஞ்
சிற்றாறு பாயுந் திருநணா—பெற்றோரை
யூட்டிப்பின் னுண்பா ருவந்தோர்க் குறுதியுரை
யூட்டிப்பின் னுண்பா ருறை.

(1) வற்று மழைநீர் சிறு ஆறு பாயும் - வற்றாத மழைநீர் சிற்றாற்றில் செல்லும். (2) மா விடை சில் தாறு பாயும்- வண்டுக் கூட்டம் சிறிய பூக்குலையிற் சென்று தேனுண்ணும். (3) பா இடை சில் தாறு பாயும் - நூற்பாவின் ஊடே சிறிய நூற்றாறு செல்லும். இது ஊடை.

மா - வண்டு. விடை - கூட்டம். மாவிடை - வண்டுக் கூட்டம். பா-நூற்பா - துணி நெய்யும் பா.

பெற்றோரை ஊட்டிப் பின் உண்பார் - பெற்றோரை உண்பித்துத் தாம் பின்பு உண்பர். வயது சென்ற பெற்றோர்க்கு உணவிட்டு உண்ணுதல் பேரறமாகும். உவந்தோர்க்கு உறுதியுரை ஊட்டி பின்னுண்பார் - விரும்பினோர்க்கு அறிவுரை புகட்டி நட்புக் கொள்வர். விரும்பினோ

ரிடம் நட்புக் கொண்டு அறிவுரை புகட்டி நல்லோராக்குவ ரென்பதாம். பின்னுண்ணல் - நட்புக் கொள்ளுதல். உறை - இருப்பிடம். (22)

28. தகையெய்து மூரலருஞ் சால்பொற் கொலரு
நகைசெய்து வாழு நணுவே—வகைவகையாத்
தையல ருள்ளமிகுஞ் சார்பு தகத்தைக்குந்
தையல ருள்ளமிகுஞ் சார்பு.

தகை எய்து - தகுதி வாய்ந்த. மூரலர் - நகைச்சுவை யாளர், முதிர்ந்தவர். தகை எய்து மூரலர் - தகுதி வாய்ந்த நகைச் சுவையாளர், தகுதியில் முதிர்ந்தவர் - தகுதி மிக்க வர். இவ் விருபொருளும் கொள்க.

(1) தகை எய்து மூரலர் நகை செய்து வாழும் - தகுதி வாய்ந்த நகைச் சுவையாளர் நகைச் சுவையால் பிறரைச் சிரிக்க - மகிழச் செய்து வாழும். (2) தகை எய்து மூரலர் ந கை செய்து வாழும் - தகுதி மிக்கவர் சிறந்த ஒழுக்க முடையராய் வாழும். ந - சிறப்பு. கை - ஒழுக்கம். கை செய்தல் - ஒழுகுதல். (3) சால் பொன் கொல்லர் நகை செய்து வாழும் - சிறந்த பொற் கொல்லர் பொன்மணி நகை கள் செய்து வாழும்.

தையலர் உள்ளம் மிகும் சார்பு தக - பெண்களின் மனம் மிகவும் விரும்புவது போல. வகைவகையாத் தைக்கும் - விதவிதமாகத் தைக்கும். சார்தல் - விரும்புதல். தையலர் உள்ளம் மிகும் சார்பு - தையற்காரர் முயற்சியால் மிகும் இடம். முயற்சியால் மிகல் - முயன்று வேலைப்பாட்டில் உயர் வடைதல். உள்ளம் - ஊக்கம், முயற்சி. சார்பு - இடம். (23)

29. செந்தமிழாய் வோரிடத்துஞ் சிற்றிளைஞ ருண்ணிடத்துஞ்
சிந்தனக்குன் றோங்குந் திருநணு—வந்தவர்க்குப்
பட்டுவிரிப் பார்தமிழ்த்தீம் பாறருவார் பார்புகழ்நூல்
பட்டுவிரிப் பார்தமிழ்த்தீம் பால்.

செந்தமிழ் ஆய்வோர் இடத்து சிந்தனம் குன்று ஓங்கும் - நல்ல தமிழை ஆராய்வோரிடம் பெரிய எண்ணங்கள் தோன் றும். சிற்றிளைஞர் உண் இடத்து சிந்து அனம் குன்று ஓங் கும் - இளங் குழந்தைகள் உண்ணும் இடத்தில் சிந்துகின்ற அன்னங் குன்றுபோலக் குவியும்.

சிந்தனம் - சிந்தனை ; சிந்தனையாகிய குன்று - உருவகம். அன்னம் - சோறு. குன்று - மிகுதி.

தம் வீடு அல்லது கடைக்கு வந்தவர்க்கு; பட்டு விரிப்பார் - பட்டுச் சமுக்காளம் விரித்து உட்கார வைப்பார். தமிழ்த் தீம் பால் தருவார் - இன் சொல் சொல்லித் தேநீர் தருவார். பார்புகழ் நூல் பட்டு விரிப்பார் - உலகம் புகழும் நூல், பட்டுச் சமுக்காளத் தொழிலையுடையார் வாழும். தமிழ்த் தீம்பால் - மிக்க இனிமையான இடம். தமிழ் - இனிமை. விரிப்பு - சமுக்காளம். விரிப்பார் - சமுக்காளத் தொழிலையுடையார். நூல் பட்டு விரிப்பு - நூல் சமுக்காளமும் பட்டுச் சமுக்காளமும். தமிழ் - இனிமை. தீம் - தித்திப்பு, இனிமை. தமிழ்த் தீம் - மிக்க இனிமை. பால் - இடம். (24)

30. பூவையர்பூஞ் செவ்வாயும் பூந்துறையு மீந்துறையுங்
கோவை நிகர்வானி கூடலே—பாவை
யனையார் கணிப்பா ரகப்படுசெல் வங்கை
யனையார் கணிப்பா ரகம்.

(1) பூவையர் பூ செவ்வாய் கோவை நிகர் - பெண்களின் அழகிய இதழ் கோவைப் பழத்தை ஒக்கும். (2) பூந்துறை கோவை நிகர் - அழகிய கூடுதுறை தாழ்வடத்தையொக்கும். தாழ்வடம் - மகளிர் கழுத்தில் அணியும் பொற் சங்கிலி. மார்பில் சங்கிலி தொங்குவது போல் உள்ளது கூடுதுறை. ஊர் - மார்பு. இரண்டாறுகளும் கூடுவது - சங்கிலி. (3) ஈம் துறை கோவை நிகர் - ஈவோர் பால் மாட்டை ஒப்பர். ஈம் துறை - ஈயும் இடம்-ஈவோர். ஈம் - ஈயும். துறை - இடம். கோ - மாடு. "சுரந் தமுதம் கற்று தரல் போல் கரவா தளிப்பரேல்" என்பது காண்க. பூ - அழகு.

பாவை அனையார் கண் - தலைவியர் பால். இப்பார் அகப்படு செல்வம் - களவொழுக்கத்தை, கைஅனையார் கணிப்பார் - செவிலித் தாயர் ஆராய்வர்.

இப்பார் அகப்படு செல்வம் - இவ்வுலக இன்பப் பேறு - களவொழுக்கம். பார் - உலகம். தலைவியின் களவைச் செவிலி ஆராய்தல் - நாட்டம் எனப்படும். அது நாண நாட்

டம், நடுங்க நாட்டம் என இரு வகைப்படும். கணித்தல் - ஆராய்தல். அகம் - இடம். அவ்வாறு ஆராயும் தாயர் வாழும் இடம். (25)

**31.** மாக்கண் வளருநரும் வண்குருகும் பொன்குருகுஞ்
சேக்கை கிடக்குந் திருநணு—பூக்குமதி
யாசிரி யப்பயிற்சி யாமரசர் கல்லூரி
யாசிரி யப்பயிற்சி யாம்.

(1) கண் வளருநர் சேக்கை கிடக்கும் - தூங்குவோர் படுக்கையில் படுக்கும். (2) வண் குருகு சேக்கை கிடக்கும் - இளம் பறவைக் குஞ்சு கூட்டில் இருக்கும். (3) பொன் குருகு சே கை கிடக்கும் - பொன் வளையல் சிவந்த கையில் கிடக்கும்.

மா - கரிய. கண் வளர்தல் - தூங்குதல். குருகு - பறவை, வளையல். சேக்கை - படுக்கை, குருவிக் கூடு.

பூக்கும் மதி - மலரும் அறிவு. ஆசு இரிய - குற்றம் அகல. பயிற்சி ஆம் - பயிற்சி பெறும். அரசர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி ஆம் - அரசினர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி இருக்கும் இடம் ஆகும்.

மலர்தல் - விரிதல். மதி - மனம், அறிவு. ஆசு - குற்றம், அறியாமை. அறிவில் உள்ள குற்றம். அகல - நீங்க. அரசினர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி, பவானிக் குமாரபாளையத்தில் இருக்கிறது. இது 1955-ல் ஏற்பட்டது. (26)

**32.** முற்று மொழிச்சியரும் மோழையருங் காளையருஞ்
சிற்றுடை கட்டுந் திருநணு—கற்றுரைத்
தம்மனைக்கண் போற்றுவார் தாய்மொழியாந் தண்டமிழைத்
தம்மனைக்கண் போற்றுவார் சார்பு.

(1) முற்று மொழிச்சியர் சிற்றுடை கட்டும் - சிறுமியர் சிற்றுடை உடுத்துவர். (2) மோழையர் சில் தாள் தை கட்டும் - மொட்டையடித்துக் கொண்டவர் சிறிய கயிற்றை அழகாகக் கட்டிக் கொள்ளும். தாள் - கயிறு. தை - அழகு. மொட்டையடித்துக் கொண்டவர் கறுப்புக் கயிற்றை அழகுக்காகக் கையில் கட்டிக் கொள்ளுதலை அறிக. (3) காளையர்

சில்தாடை கட்டும் - இளைஞர்க்குச் சிறிய தாடி முளைக்கும். இளைஞர்க்கு முகத்தில் மயிர் அரும்பும் என்பதாம்.

மனை - வீடு. தமிழைத் தம் அனை கண் போற்றுவார் - தமிழைத் தம் தாய் போலவும் கண் போலவும் போற்றுவார். அனை - அன்னை. சார்பு - இடம். (27)

**33. காவியங்கண் ணார்களவுங் கைக்கொள்ளற் காமளவும்
பாவலர் தூற்றும் பவானியே—ஆவணஞ்சென்
றேனங்கை வாங்குவா ரிற்குடைய திக்கடையென்
றேனங்கை வாங்குவா ரில்.**

காவி அம் கண்ணார் களவு பா அலர் தூற்றும் - கருங் குவளை போன்ற அழகிய கண்களையுடையார் களவொழுக் கத்தைப் பரந்த அலர் தூற்றும். பரந்த - மிக்க. அலர் தூற் றல் - களவொழுக்கத்தைப் பற்றிப் பேசுதல். கைக்கொள் ளற்கு ஆம் அளவு - கைக் கொள்ளத் தக்க அறத்தை. அதா வது நல்லறம். பாவலர் தூற்றும் - புலவர்கள் பரப்பும். புலவர்கள், அறத்தைக் கடைப்பிடித்து நடக்கும்படி மக்கட்கு அறிவுறுத்துவரென்பதாம். அளவு - அறம்.

ஆவணம் சென்று - கடைத் தெருவுக்குப் போய், 'ஏன் நங்கை! வாங்குவார் இற்கு உடையது இக் கடை' இது ஒருத்தி கூற்று. இற்கு உடையது - வாங்குவார் வாழ்க்கைக் குத் தகுதியுடையது. அதாவது வேண்டிய தகுதியான ஏனங்கள் உடையது. என்று-என்று கூறிக்கொண்டு. ஏனம் கை வாங்குவார் - பாத்திரங்கள் வாங்குவார்.

ஏனம் - பாத்திரம். கை - துணைவினை. கைவாங்குவார்- வாங்குவார். கையால் வாங்குவார் எனினுமாம். இல் - இடம். (28)

34. தாய்மை யிரும்பலனைத் தன்னலமற் றோர்நலனைச்
சேய்மை விரும்புந் திருநணு—வாய்மை
கடைப்பிடித்தார் மேவுங் களஞ்சார் வழிப்போக்
கடைப்பிடித்தார் மேவுங் களம்.

தாய்மை இரும் பலனை சேய் மை விரும்பும் - தாயெரு மையின் மிக்க பாலை இளங் கன்று விரும்பும். தன்னலம்

அற்ரூேர் நலனை சேய்மை விரும்பும் - தன்னலமற்ரூேர் நற்குணத்தை, நல்வாழ்வை - தொலைவிலுள்ளோர் விரும்புவர்.

மை - எருமை. பலன் - பால். நலன் - நற்குணம், நல்வாழ்வு. சேய்மை - தொலைவு, தொலைவிலுள்ளோர்.

வாய்மை கடைப் பிடித்தார் மேவும் - உண்மை கடைப் பிடித் தொழுகுவோரைப் பொருந்தும். களம் சார் வழிப் போக்கு அடைப்பு இடித்தார் - இடத்தை அடையும் வழியில் செல்லும்போதுள்ள தடையைப் போக்கினுர். மேவுதல்- பொருந்துதல், நட்புக் கொள்ளுதல். நட்புக்கு வரும் இடையூற்றைப் போக்கி, நட்பைக் கடைப் பிடித்து நடப்போர் என்பதாம். அடைப்பு - தடை. இடித்தல் - அத்தடையைப் போக்குதல். மேவும்-பொருந்தியிருக்கும். களம்-இடம். (29)

35. பல்வணிக ரின்குழுவும் பாய்நீர்ப் பசுங்கழிவுஞ்
செல்வங் குவிக்குந் திருநணு—கல்விப்
பொருளாக்கு விப்பார் புயல்போலத் தீம்பா
லருளாக்கு விப்பா ரகம்.

பல் வணிகரின் குழு செல்வம் குவிக்கும் - பல வணிகர் கூட்டம் பொருளை மேன்மேல் ஈட்டும். பாய் நீர் பசும் கழிவு - நீர் செல்லும் புதிய வாய்க்கால் ; அதாவது புதிதாக நீர் செல்லும் வாய்க்கால். செல் வங்கு விக்கும்-நீர் செல்லுகின்ற வங்கை நிரப்பும். வங்கு - வெடிப்பு, குழி.

கல்விப் பொருள் ஆக்குவிப்பார்-கல்வியாளராக்குவார். புயல்போல தீம்பால் அருள் ஆ குவிப்பார் - மேகம்போலத் தித்திப்பான பால் தரும் மாடுகளைப் பெருகச் செய்வார். மாடு தமிழ் நாட்டின் சிறந்த செல்வமாகும். அகம் - இடம். (30)

36. *பூப்பழகு நற்றலையைப் பொற்கனிவா ழைக்குலையைச்
சீப்பழகு செய்யுந் திருநணு—மூப்பு
வருமுன் னறஞ்செய்வார் வான்புகழோ டின்பு
வருமுன் னறஞ்செய்வார் வாழ்வு.

---

* அட்டைப்பட விளக்கப் பாட்டு.

பூ பழகு நல் தலையை சீப்பு அழகு செய்யும் - பூ வைக்கின்ற அழகிய தலை மயிரைச் சீப்பு அழகு செய்யும். பொன் கனி வாழைக் குலையை சீப்பு அழகு செய்யும் - பொன் போன்ற பழங்களையுடைய வாழைக் குலையைச் சீப்பு அழகு செய்யும். சீப்பு - மயிர் வாருங் கருவி, வாழைச் சீப்பு.

மூப்பு வருமுன் அறஞ் செய்வார் - முதுமைப் பருவம் வருமுன்னர் அறங்கள் செய்வார். வான் புகழோடு இன்பு வரும் - மிக்க புகழோடு இன்பம் வளரும், மிகும். முன் அறம் செய்வார் - இல்லறம் நடத்துவார். வாழ்வு - வாழுமிடம் ஊர். துறவறம் இல்லறத்தின் பின் நிகழ்தலான், இல்லறம் 'முன்னறம்' எனப்பட்டது. புகழும் இன்பமும் வளரும் இல்லறம் என்க. (31)

37. திங்களுந்து சோலையினிற் றேனினமு மீனினமுங்
கொங்கருந்தி வாழ்வானி கூடலே—பொங்கியவான்
பானிச்ச முக்காளம் பாற்பயன்போற் பார்புகழ்ப
வானிச்ச முக்காள வைப்பு.

திங்கள் உந்து சோலையினில் தேனினம் கொங்கு அருந்தி வாழ் - சந்திரனை முட்டும்படி உயர்ந்த சோலையில் வண்டுகள் தேனையுண்டு வாழ்கின்ற. மீனினம் கொங்கர் உந்தி வாழ் - மீன்கள் காவிரியாற்றில் வாழ்கின்ற.

தேன் - வண்டு. கொங்கு - தேன். உந்தி - ஆறு. கொங்கர் - கொங்கு நாட்டார். காவிரி தோன்றும் மேற்குத் தொடர்ச்சிமலை கொங்குநாட்டைச் சேர்ந்ததாகலின், காவிரி கொங்கர் ஆறு எனப்பட்டது. வானியாறுங் கொள்க.

பொங்கிய ஆன்பால் நிச்சம் முக்கு ஆள்-மிக்க மாட்டுப் பாலை எப்போதும் குடிக்கின்றவன். அம்பால் பயன்போல் - தோட்டத்தில் சிறந்த பயனைக் கொள்வதுபோல. நிச்சம் - எப்போதும். முக்குதல்-உண்ணுதல். அம்பால்-தோட்டம். எப்போதும் மாட்டுப் பால் மிகுதியாக உண்பவன் நல்ல உடலுறுதியுடன் இருப்பான் ஆகையால், அவன் திறமையாகப் பாடுபட்டு நிலத்தில் மிகுந்த பலன் எடுப்பான். அதுபோல, சிறப்புடன் நெய்யும் பார்புகழ் பவானிச் சமுக்காளத்தின் இருப்பிடம் கூடல் என்பதாம். வைப்பு - இடம். திங்களுந்து சோலை - உயர்வுநவிற்சி யணி. (32)

**38.** வம்பலர்தங் கைத்தலத்தை வாட்டுவறு மைக்குலத்தைச்
செம்பொன் றணிக்குந் திருநஞ—அம்புலியை
வானிவந்து போதருமார் மாபந்தாச் சிற்றிளைஞர்
கானிவந்து போதருமார் காப்பு.

வம்பலர்தம் கைத்தலத்தை செம்பு ஒன்று அணிக்கும் - விருந்தினர் கையை நீர்ச் செம்பு பொருந்தி அழகு செய்யும். ஒன்றுதல் - பொருந்துதல். உண்ணுநீர் கொடுத்து வர்வேற்றல். வாட்டு வறுமைக் குலத்தை செம்பொன் தணிக்கும் - வருத்துகின்ற மிக்க வறுமையை சிவந்த பொன் போக்கும். வாட்டுதல் - வருத்துதல். குலம் - மிகுதி. பொன்-பொருள்.

அம்புலியை வான் நிவந்து போதரும் - சந்திரனை, வானத்தே உயர்ந்து சென்று கீழே வருகின்ற, ஆர் மா பந்தா - அழகிய பெரிய பந்தாக எண்ணி, சிற்றிளைஞர் கால் நிவந்து போதருமார் - இளஞ் சிறுவர்கள் அப்பந்தை உதைக்கக் காலைத் தூக்கிக்கொண்டு செல்வார்கள்.

அம்புலி - சந்திரன். இங்கு முழுமதி. நிவத்தல் - உயர்தல். போதருதல் - வருதல், செல்லுதல். போதருமார் - போதருவார் - செல்வார். சின்னஞ் சிருர்கள், இரவில் வான வெளியில் விளங்கும் வட்ட மதியை, பிறரால் உதைக்கப்பட்டு மேலே சென்று திரும்பி வரும் பெரிய பந்தென்று எண்ணி, அதை உதைக்கக் காலை தூக்கிக் கொண்டு செல்வார்கள் என்பதாம். இது, மயக்கவணி. காப்பு-ஊர். (33)

**39.** மங்கையர்தம் பொற்றெடியு மன்றுணடிப் போர்படியுஞ்
செங்கையிடை யார்க்குந் திருநஞ—சங்கத்
தொகைநூ லிழைப்பார் சுடர்கம் பளநெய்
தொகைநூ லிழைப்பார் துறை.

மங்கையர்தம் பொன்தொடி செம் கையிடை ஆர்க்கும் - பெண்களுடைய பொன் வளையல் சிவந்த கையின்கட் பொருந்தும். மன்றுள் நடிப்போர் படியும் செங்கை இடை ஆர்க்கும் - நடன அரங்கில் நடிப்பவர், ஆட்டத்திற்கு ஏற்றவாறு அமையும் சிவந்த கையை இடுப்பில் வைக்கும்.

தொடி - வளையல். மன்று - ஆடரங்கு. இடை - இடுப்பு.

சங்கத் தொகை நூல் இழைப்பார் - சங்க நூல்களை நுண்ணிதாக ஆராய்வார். சுடர் கம்பளம் நெய் தொகு ஐ நூல் இழைப்பார் - அழகிய சமுக்காளம் நெய்கின்ற நூலை மிகுதியாக நன்கு சுற்றுவார்.

சங்கத் தொகை நூல் - பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு ஆகிய சங்க நூல்கள். இழைத்தல்- நுண்ணிதாக ஆராய்தல். சுடர் - அழகு. கம்பளம் - சமுக் காளம். தொகுதல் - மிகுதல். ஐ - உயர்வு, நன்கு. இழைத் தல் - தாறுச் சுற்றுதல். சமுக்காள நெய்யும் நூல் சுற்றுவோ ரும் சங்கத் தமிழ் நூல்கள் படிப்பர் என்பதாம். துறை - இடம். **(34)**

**40.** **காணுரும் பூம்பிழியுங் காதிடைநல் லார்மொழியுந்**
**தேனீர்த்துச் செல்லுந் திருநணு—ஆறுநூ**
**லாலைப்பாட் டாள ரயர்வுற்ற போதுதெனூ**
**லாலைப்பாட் டாள ரயர்.**

கான் ஆரும் பூம் பிழி தேன் ஈர்த்துச் செல்லும் - காட் டில் உள்ள பூந்தேனை வண்டுகள் எடுத்துச் செல்லும். காதிடை நல்லார் மொழி தேன் நீர்த்துச் செல்லும் - கேட் போர் காதின்கண் பெண்கள் சொல் இனிய தன்மையாய்ப் புகும்.

கான் - காடு. ஆரும் - பொருந்தும். பிழி - தேன். தேன் - வண்டு. நல்லார் - பெண்கள். தேன் - இனிமை. நீர்மை - தன்மை.

ஆறு நூல் ஆலைப் பாட்டாளர் - இடையறவுபடாத நூலாலைத் தொழிலாளர். அயர்வு உற்ற போது - சோர் வடைந்தபோது, தென் நூல் ஆல் ஐ பாட்டாளர் - தமிழ்ப் பாட்டுக்களை மகிழ்ச்சி மிகப் பாடுவர்.

ஆறு - ஆறாத - இடையறாத, குறையாத ; தொடர்ந்து குறைவின்றி நடக்கும். அயர்வு - சோர்வு, சலிப்பு. தென் நூல் - தமிழ் நூல். இங்கு தமிழ்ப் பாட்டைக் குறித்தது ; காரியவாகு பெயர். தென் - இனிமை, இசை. தென்நூல் - இனிய தமிழிசைப் பாட்டு. ஆலுதல் - மகிழ்தல். ஐ-மிகுதி. பாட்டாளர் - பாட்டுப் பாடுபவர்.

ஆலைத் தொழிலாளர் சோர்வுற்றபோது, இன்பமிக்க தமிழ்ப் பாட்டுக்களைப் பாடி, அச் சோர்வைப் போக்கிக் கொள்வர் என்பதாம். அயர் - அத்தகைய ஆலைத் தொழிலாளர் விரும்பி வாழும் இடம். அயர் - விரும்பி வாழும் இடம். அயர்தல் - விரும்புதல்.

குமாரபாளையத்தில் **சுந்தரம் நூலாலை** என்னும் நூலாலை உள்ளது.

(35)

**41. மேனியுமின் ஞர்நிமிரு வேணி முகமுமிரு**
**வானிலவு போலும்ப வானியே—கானற்**
**கருங்குவளைக் கண்ணர்தங் காமமிக வாற்கை**
**யொருங்குவளைக் கண்ணர்தம் மூர்.**

மின்ஞர் மேனி இரு வான் நிலவு போலும் - பெண்கள் உடம்பு பெரிய வானின் ஒளி போலும். இரு-பெரிய, நிலவு - ஒளி. நிமிரு வேணி முகம் இரு வால் நிலவு போலும்-நீண்ட சடையையுடைய முகம் இரண்டு வால்களையுடைய சந்திரன் போலும்.

நிமிர்தல் - நீளுதல். வேணி - சடை. சடை-இரட்டைச் சடை. நிலவு - சந்திரன். நிலவு - முகத்திற்கும், இருவால்- இரட்டைச் சடைக்கும் உவமை. இருவான், இருவால் எனக் கொள்க.

கர்ன் நல் கருங் குவளைக் கண்ஞர் - மணம் பொருந்திய அழகிய கருங் குவளை போன்ற கண்ணையுடைய மகளிர். தம் காம மிகவால் - தமது மிக்க காமத்தால். கை ஒருங்கு வளைக்கு அண்ஞர் - கையினின்று வளை கழலும்படி இரங்குதலைச் செய்யார்.

ஒருங்குதல் - நீங்குதல். அண்ஞர் - அணுகார்; அச் செயலை அணுகார். மிக்க காமத்தால் மிகவும் வருந்தின் உடல் இளைத்து வளை கழலுமென்க.

வணிகத்தின் பொருட்டு வெளியூர் சென்ற கணவன் வரவு நீட்டிக்கின், மனைவி மிக்க காமத்தால் பிரிவாற்ருது வருந்துதல் ஒத்த காமமாகாது - நல்லொழுக்கமாகாது; ஒவ்வாக் காமமாகிய ‘‘தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம்’’ (தொல், அகத் - 51) என்னும் பெருந்திணைக் குறிப்பாகு

மாகையால், அங்ஙனம் இரங்குதலைச் செய்யாரென்பதாம். இது, பொருட் பிரிவு. (36)

42. தார்பொருந்து மாமணத்துந் தண்டமிழ்ப்பாப் பாவினத்துஞ்
சீர்பொருந்தி நிற்குந் திருநகு—கார்பொருந்தி
யிட்டுக் களிப்பா ரிசைகேளாப் போதேய
கட்டுக் களிப்பார் களம்.

தார் பொருந்து மாமணத்து சீர் பொருந்தி நிற்கும் – மாலை பொருந்தும் சிறந்த திருமணத்தில் சீர் பொருந்தியிருக்கும். தார் – மாலை. சீர் – மணவினை முடிக்கும் சிறப்புக்கள், சடங்கு; பெண்ணுக்குப் பெற்றோர் கொடுக்கும் வரிசையுமாம். தமிழ் பா பாவினத்து சீர் பொருந்தி நிற்கும் – தமிழ்ப் பாவிலும் பாவினத்திலும் சீர்கள் பொருந்தி யிருக்கும்.

பா – வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன. பாவினம் – தாழிசை, துறை, விருத்தம் என்பன. சீர் – மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர், கனிச்சீர் என்பன. இவற்றின் விரிவை யாப்பிலக்கணத்தில் காண்க.

கார் பொருந்தி இட்டு களிப்பார் – மேகம் போலப் பிறர்க்குக் கொடுத்து மகிழ்வார். இசை கேளாப் போதே அகட்டுக்கு அளிப்பார் – தமிழிசையைக் கேளாத போதே வயிற்றுக்கு உணவூட்டுவார்; உண்பார்.

கார்–மேகம். இசை–தமிழிசை, தமிழ்ப் பாட்டு. அகடு–வயிறு.

"செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்"—(குறள்)

என்பது வள்ளுவர் வாய்மொழி. (37)

43. மங்கையர்பொற் றாலியும்பாய் மாகயல்வில் லுந்தமிழ்த்தாய்
செங்கொடியிற் றோன்றுந் திருநகு—சங்கத்
தமிழ்தங் குடிப்பார் தகுமென்று மும்மைத்
தமிழ்தங் குடிப்பார் தலம்.

மங்கையர் பொன் தாலி செம் கொடியில் தோன்றும் – பெண்களின் பொன்னால் செய்த தாலி சிவந்த பொன்னால்

செய்த கொடியில் கோக்கப்பட்டிருக்கும். பாய்மா கயல் வில் தமிழ்த் தாய் செம் கொடியில் தோன்றும் - புலியும் மீனும் வில்லும் உயரிய தமிழ்க் கொடியில் இருக்கும்.

பாய்மா - புலி. கயல் - மீன். வில் புலி மீன் என்பவை முறையே சேர சோழ பாண்டியர் என்னும் செந்தமிழ் வேந் தரின் கொடிகளின் குறிகளாகும். வில் முதலிய மூன்றும் அமைந்ததே தமிழ்க் கொடியாகும். செங்கொடி - உயரிய கொடி.

தமிழ் தம் குடி பார் தகும் என்று - தமிழ் தமது குடி யாகிய வண்டிக்கு நெடுஞ்சட்டம் எனத் தகும் என்று கொண்டு, மும்மைத்து அமிழ்தம் குடிப்பார் - முப்பால் குடிப்பர்.

பார் - வண்டியின் நெடுஞ் சட்டம். இச் சட்டங்களே வண்டியின் உடலாகும். மும்மைத்து அமிழ்தம் - மூன்றுகிய பால் - முப்பால் - திருக்குறள். மும்மைத்து - மூன்று. அமிழ் தம் - பால். திருக்குறள் படிப்பார் என்பதை, 'முப்பால் குடிப் பார்' என்பது உபசார வழக்கு. தலம் - இடம். (38)

44. அங்கோதை யார்கடத்தும் ஆய்பிள்ளைப் பாட்டிடத்துஞ்
செங்கீரை கொள்ளுந் திருநஞ—மங்கா
விரிப்புத் தொழிலுலக மேற்றும் படிசெய்
விரிப்புத் தொழிலுலக மேற்று.

அம் கோதையார் கடத்து செங்கீரை கொள்ளும் - அழகிய மகளிர் விளை நிலத்தில் நல்ல கீரை பறிக்கும். கடம்- காடு - விளைநிலம். செங்கீரை - நல்ல கீரை, ஒருவகைக் கீரையுமாம். ஆய் பிள்ளைப் பாட்டிடத்து செங்கீரை கொள் ளும்-தாய் பிள்ளைப் பாட்டின்கண் பிள்ளையை மழலைச் சொல் பேசும்படி கேட்கும்.

பிள்ளைப் பாட்டு - தமிழிலுள்ள 96 வகை நூல்களி லொன்று. செங்கீரை - பிள்ளைத் தமிழின் பத்துப் பருவங்களி லொன்று. செம் கீரை - செவ்விய சொல், மழலைச் சொல். கீரை - சொல். 'செங்கீரை ஆடியருளே' எனத் தாய், பிள்ளையை மழலைச் சொல் சொல்லும்படி கேட்பதாகப் பாடப் படும் செங்கீரைப் பருவம்.

மங்கா விரிப்புத் தொழில் உலகம் மேற்றும்படி செய் - மங்காத சமுக்காளத் தொழில் உலகம் மேற்கொண்டு புகழும் படி செய்கின்ற. உலக விரிப்பு தொழில் மேற்று - உயர்ந்த மிகுதியான தொழிலாக உள்ள இடம், திருநணா.

விரிப்பு - சமுக்காளம். மேற்றுதல் - மேலாகக்கொண்டு பாராட்டுதல். உலகம் - உயர்வு. விரிப்பு - விரிவு - மிகுதி. மேற்று - மேலது - இடம். பவானியில் சமுக்காளத் தொழிலே சிறந்த மிகுதியான தொழிலாகும். (39)

45. ஊடையும்பா வுந்துணியை யூர்வானி தண்பொனியைக்
கூடிப் பெறுவானி கூடலே—ஆடிப்
பதினெட்டிற் கூடும் பதிபெயர்ந் தார்கைப்
பதினெட்டிற் கூடும் பதி.

ஊடையும் பாவும் கூடி துணியைப் பெறும் - ஊடையும் பாவும் சேர்ந்து துணியை உண்டாக்கும். ஊடை பாவின் ஊடே - குறுக்கே - பாய்ச்சும் நூல். வானி பொன்னியைக் கூடி வானி கூடல் பெறும். வானியாறு காவிரியாற்றைக் கூடி வானிகூடலைப் பெறும். வானியாறு காவிரியைக் கூடு மிடத்தில் இருப்பதால், பவானி - 'வானிகூடல்' என்னும் பெயர் பெற்றது.

ஊர்தல் - செல்லுதல், எப்போதும் நீர் வற்றாது செல்லு தல். தண் - குளிர்ச்சி. பொனி - பொன்னி - காவிரி.

ஆடிப் பதினெட்டில் கூடும் - ஆடிப் பதினெட்டன்று கூடுதுறையில் நீராட வெளியூர் மக்கள் பவானியை அடைவர். ஆடிப் பதினெட்டு - கூடுதுறையில் குளிக்கும் சிறப்பு நாட்களில் தலையாயது. பதி பெயர்ந்தார் - ஊரை விட்டு நீங்கி வெளியூர் சென்ற தங் கணவர். கைப்பதில் நெட்டிற்கு ஊடும் - கடிதம் எழுத நீண்ட நாளானதற்காக மனைவியர் ஊடுவர்.

கைப்பதில் - கடிதம். நெட்டு - நெடுநாள். வணிகத்தின் பொருட்டு வெளியூர் சென்றிருந்த கணவர் வரவே, நெடுநாள் கடிதம் எழுதாமல் இருந்தமைக்காக மனைவியர் ஊடுவரென்க. ஊடுதல் - பிணங்குதல். பதி - ஊர். (40)

**46.** **பாறியுள்ளான் பாய்விடத்தும் பைங்கா னடுமிடத்துஞ்**
**சேறடித்துச் செல்லுந் திருநணு—ஊறுசுவைக்**
**கண்டொன்று சொல்லார் களந்தப்பிக் கையறினுங்**
**கண்டொன்று சொல்லார் களம்.**

உள்ளான் பாறி பாய்விடத்து சேல் தடித்துச் செல்லும்- மீன் கொத்திப் பறவை எழுந்து பாயும்போது கயல் மீன்கள் மின்னல் போல விரைந்து செல்லும். பைங்கால் நடும் இடத்து சேறு அடித்துச் செல்லும் - வயலில் நாற்று நடும் போது வயலைச் சேருக்குவர்.

பாறுதல் - நிலை பெயர்தல். பாறி - எழுந்து. உள்ளான்- மீன் கொத்திப் பறவை. பைங்கால்-வயல். சேல்-கெண்டை மீன். தடித்து - மின்னல்.

ஊறு சுவை கண்டு ஒன்று சொல்லார் - மிக்க சுவை யுடைய சர்க்கரை போன்ற இனிய சொல்லையுடைய மகளிர், களம் தப்பி கையறினும் - குறி பிழைத்து மிகவும் வருந்தி னும், கண்டு ஒன்று சொல்லார் - ஒன்றைக் கண்டு மற்றொன் றைச் சொல்லார் - பொய் சொல்லார். "கண்டொன்று சொல் லேல்"—ஔவையார். களம் - இடம்.

ஊறுசுவை - மிக்க சுவை. கண்டு - சர்க்கரை. ஒன்று தல் - பொருந்துதல். களம் - குறியிடம். கையறுதல் - வருந் துதல்.

களந் தப்புதல்-குறி பிழைத்தல், அல்லது அல்ல குறிப் படுதல். அதாவது, களவொழுக்கம் ஒழுகும்போது, தலைவி குறித்த இடத்தில் தலைவன் சென்று தலைவியை எதிர்ப்படு வான். இது பகற் குறி, இரவுக் குறி என இரு வகைப்படும். இரவுக் குறியில் தலைவன், புள்ளெழுப்பியும், புனலொலித் தும் தனது வருகையைத் தலைவிக்குத் தெரிவிப்பான். பறவை கள் தாமாகவே எழுதலும், கிணற்று மேட்டிலுள்ள மரங்களி லிருந்து காய் கனிகள் கிணற்றுக்குள் விழுதலும் கூடுமாகை யால், இவற்றைத் தலைவி, தலைவன் செய்த குறியென்று மயங்கி, குறியிடம் சென்று தலைவனைக் காணாது வறிதே திரும்புவாள். இவ்வல்ல குறிப்பாடு தலைவிக்கு மிக்க வருத் தத்தைத் தருவதாகும். இன்றும் இது நிகழ்தலுண்டு. (41)

**47.** **வண்ணமனை வாய்தோறும் வண்டமிழை யாய்வோருந்**
**திண்ணைக் குறடேர் திருநகு—பண்ணைவயல்**
**வாய்மை களையார் வளமுடையார் யாதுறினும்**
**வாய்மை களையார் மனை.**

வண்ணமனை வாய்தோறும் திண்ணை குறடு ஏர்-அழகிய வீட்டு வாயில்கள்தோறும் திண்ணையும் வாயிற்படியும் அழகு செய்யும். வண்டமிழை ஆய்வோர் திண் ஐ குறள் தேர் - வளவிய தமிழை ஆராய்வோர் திண்ணிய அழகிய திருக் குறளை ஆராயும்.

வண்ணம் - அழகு. வாய் - வாயில். குறடு - வாயிற் படி. ஏர் - அழகு. திண்மை - அசைக்கமுடியாத பொருட் செறிவு. அழகு - சொல்லழகும் பொருளழகும். தேர்தல் - ஆராய்தல்.

பண்ணை வயல் வாய் மை களை ஆர் - குளத்தையடுத்த வயலின்கண் எருமைகள் புல் மேயும். வளம் உடையார் - நீர் நில வளத்தினை உடையார். யாது உறினும் வாய்மை களையார் - எவ்வளவு துன்பமுற்றாலும், அல்லது எவ்வளவு பொருள் கிடைத்தாலும் ; வாய்மை களையார் - உண்மையை ஒளியார், நீக்கார்.

பண்ணை - குளம். மை - எருமை. புல் களையப்படுத லால் 'களை' எனப்பட்டது. ஆர்தல் - உண்ணுதல். மனை - இடம். (42)

**48.** **நாற்றுநடு வார்விரலு நற்குரலும் பொற்சிரலுஞ்**
**சேற்றுக்கண் பூக்குந் திருநகு—நாற்று**
**நடுங்கையர் பின்னனிழல் நச்சரவென் றுள்ள**
**நடுங்கையர் துன்னு நகர்.**

(1) நாற்று நடுவார் விரல் சேற்றுக்கு அண்பு ஊக்கும்- நாற்று நடுவோர் விரல் சேற்றினை அணுக முயலும். சேற்றி னுள் செல்லும் என்பதாம். (2) நல்குரல் சேற்றுக்கண் பூக் கும் - தாமரை மலர் சேற்றின்கண் பூக்கும். குரல் - பூங் கொத்து - பூ. 'பூவுக்குத் தாமரையே' என்பதால், நல்பூ- தாமரையாயிற்று. "சேற்றில் பிறந்திடும் கமல மலர்" என் பது காண்க. (3) பொன் சிரல் சேல் துக்கு அண் பூக்கும்-

அழகிய மீன்கொத்திப் பறவை கெண்டை மீனை உண்ண அணிமையில் இருக்கும். பொன் - அழகு. சிரல் - மீன் கொத்தி. துக்கு - துக்க - உண்ண. அண் - அணிமை. பூத்தல் - இருத்தல்.

நாற்று நடும் கையர் - நாற்று நடும் கையையுடைய மகளிர், பின்னல் நிழல் நச்சு அரவு என்று - சடை நிழலை நஞ்சுடைய பாம்பென்று எண்ணி. உள்ளம் நடுங்கு ஐயர் துன்னும் - மனம் அஞ்சுகின்ற பெரியோர் அப் பாம்பை அடிக்க அணுகும். இது மயக்க அணி. (43)

49. தேன்மொழியா ரின்முகமுந் தேங்கமலப் பூவகமும்
வான்மதி போலும்ப வானியே—மேன்மைமிகூர்
மன்றத்தா ரேய்ந்துமகிழ் மக்கள்மனம் போன்றுநல
மன்றத்தா ரேய்ந்துமகிழ் வாழ்வு.

தேன் மொழியார் இன்முகம் வால் மதி போலும்-தேன் போலும் இனிய சொல்லையுடைய மகளிர் இனிய முகம் வாலுள்ள திங்கள் போலும். முகம் - மதி. சடை - வால். இது, இல்பொருளுவமையணி. தேம் கமலப்பூ அகம் வான் மதி போலும் - தேன் பொருந்திய தாமரைப் பூவுள்ள குளம் வானும் மதியும் போலும். அகம் - இடம். கமலப் பூ உள்ள இடம் - குளம். கமலப் பூவும் குளமும் மதியும் வானும் போலும். வான்போலக் குளமும், மதிபோலக் கமலப் பூவும்.

மேன்மைமிகு ஊர் மன்றத்தார். ஏய்ந்து மகிழ் மக்கள் மனம் போன்று - ஒத்து மகிழ்கின்ற மக்கள் மனம் போன்று. நலம் மன்ற தார் ஏய்ந்து மகிழ்-நலம் மிக வெற்றி அடைந்து மகிழ்ந்து. வாழ்வு - வாழுமிடம்.

ஏய்தல் - ஒத்தல், அடைதல். ஒத்து மகிழ்தல்-மன்றத் தார் மகிழ்வதுபோல் மகிழ்தல். மக்கள் மனம் போன்று நலம் மன்ற-மக்கள் விரும்புகின்ற நலமெல்லாம் மிக. மன்ற-மிக. தார் - வெற்றி மாலை. (44)

50. மாணிழையா ரின்குமுத வாயிதழு மாயிதழு
நாணிகழ்வு கூறு நணுவூரே—வாணிகத்தே
மிக்கார்வங் கொண்டார் விருந்துபுறந் தந்துவள
மிக்கார்வங் கொண்டார் மிசை.

மாண் இழையார் இன் குமுத வாய் இதழ் நாண் நிகழ்வு கூறும் - மாட்சிமைப்பட்ட நகைகளையுடைய மகளிர் இனிய குமுதம் போன்ற வாயிதழ் நாணொடு பேசும்; நாணத்தக்கதைப் பேசாதென்பதாம். ஆய்இதழ் நாள் நிகழ்வு கூறும் - செய்தித் தாள்கள் நாடோறும் உலகில் நிகழும் நிகழ்ச்சிகளைக் கூறும்.

ஆய்இதழ் - ஆராயத் தக்க பொருளுடைய இதழ்; செய்திகளை, பொருள்களை ஆராய்ந்து கூறும் இதழ். இதழ் - பத்திரிகை. நாளிதழ், வார இதழ், மாத இதழ் எல்லாம் கொள்க. இதழ் - சாதியொருமை.

மிக்க ஆர்வம் - மிகுந்த விருப்பம். விருந்து புறந் தந்து- விருந்தினரை உணவிட்டு உபசரித்து. வளம் மிக்கார் வங்கு ஒண்டார் - செல்வ மிக்கவர் கரவார். வங்கு ஒண்டல் - கரத்தல்; அதாவது ஏற்பாரைக் கண்டு ஒளிந்து கொள்ளுதல். மிசை - இடம். (45)

**51.** உவ்வா நூற் பிள்ளைதம ருண்கையிலா ளின்சொலிலார்
செவ்வாயிற் கூடுந் திருநகு—ஒவ்வாச்
செயலொன்றுஞ் செய்யார் திசைமேவு நன்மைச்
செயலொன்றுஞ் செய்யார் திசை.

உ வாம் நூல் - பாவின் இடையே செல்லும் ஊடை நூல். அதாவது, நூனழிக்குள் வைத்துப் பாவின் ஊடே செலுத்தும் ஊடை நூற்ருறு. உ - இடை, நடு. வாம் - வாவும் - செல்லும். நூனழி - நாடா.

முதலடியிலுள்ள பொருள்கள்: (1) நூற்ருறு, (2) பிள்ளை, (3) தமர் - சுற்றம், (4) உண்கை - உண்ணுங்கை; அதாவது உணவெடுத் தூட்டுங் கை, (5) இலாள்-இல்லாள்- மனைவி, (6) இன்சொல், (7) இலார் - இல்லார் - வறியவர்.

(1) நூற்ருறு செம் வாயிற் கூடும் - நூற்ருறின் நூனுனி சிவந்த வாயினுல் உரிஞ்சி நூனழித் துளை வழியே இழுக்கப் பட்டு, பாவில் ஊடையாகப் பொருந்தும். 'இழை நக்கி நூல் நெருடும் ஏழை' எனல் காண்க. (2) பிள்ளை செம் ஆயில் கூடும் - குழந்தை நல்ல தாயைப் பொருந்தும். (3) தமர் செம் வாய் இல் கூடும் - சுற்றத்தார் நேர்மை பொருந்திய

மனையிற் கூடுவர், அதாவது நல்ல உறவினர் வீட்டையடை வர். (4) உண் கை செம் வாயில் கூடும் – உணவூட்டுங் கை சிவந்த வாயின்கட் சேரும். (5) இலாள் செம் வாயிற்கு ஊடும் – மனைவி தகுதியான வாயிலுக்காக ஊடும். வாயில் – தூது. தகுதியான வாயில் – தலைவனே தூதாதல்; அவனே வந்து உடலுணர்த்துதல். ஊடுதல் – மன வேறுபாடுறுதல். (6) இன்சொல் செம் வாயில் கூடும் – இனிய சொல் நேர்மை யுடையோர் வாயின்கட் பொருந்தும். (7) இலார் செம் வாயில் கூடும் – வறியவர் ஈவோர் மனைவாயிலிற் கூடும். செம்மை-ஈகைக் குணம். அது பண்பாகு பெயராய் ஈவோரை உணர்த்திற்று.

ஒவ்வா செயல் ஒன்றும் செய்யார் – தகாத செயல் ஒன்றும் செய்யமாட்டார். திசைமேவு நன்மைச் செயல் ஒன்றும் செய்யார் – உலகம் விரும்பும் நற்செயல் பொருந்தும் நல்லவர்.

ஒவ்வா – ஒவ்வாத – தகாத. திசை–உலகம். மேவுதல்– விரும்புதல். ஒன்றுதல் – பொருந்துதல். செய்யார் – நல்ல வர். திசை – இடம்; நல்லவர் வாழும் இடம். (46)

52. வாலிழையார் கூர்விழியும் வானிபொன்னி நீருழியுஞ்
சேலெதிரச் செல்லுந் திருநணு—நூலெச்
சியற்றுவார் தேமெச் சிடம்பட நன்கச்
சியற்றுவார் தேமெச் சிடம்.

வாலிழையார் கூர் விழி சேல் எதிரச் செல்லும்–தூய்மை யான நகைகளையுடைய பெண்களின் கூரிய கண்கள் கெண்டை மீனை எதிர்க்கச் செல்லும். சேலோடு ஒவ்வாது மிகும்; சேல் ஒப்பாகாது என்பதாம். வானி பொன்னி நீருழி - வானி, காவிரியாற்று நீரின் கண். சேல் எதிரச் செல் லும் - கெண்டை மீன்கள் நீரின் எதிரில் நீந்திச் செல்லும் உழி – இடம்.

நூல் எச்சு இயல் துவார் – நூல்களில் கூறப்படும் உயர் குணங்களில் நீங்கார். தேம் மெச்சிடு அம் பட – உலகம் மெச்சிடும்படி அழகுபட. நன்கு அச்சு இயற்றுவார் – நன்கு அச்சடிப்பார். தேம் எச்சு இடம் – இன்ப மிக்க இடம். அத் தகைய அச்சகத்தார் உள்ள இன்ப மிக்க இடம் என்க.

நூல் - அச்சுத் தொழில் நூல். எச்சு - உயர்வு, மிகுதி. இயல் - இயல்பு, குணம். துவார் - துவ்வார் - நீங்கார். நீங்காமல் அழகுபட அச்சியற்றுவார் என்க. தேம் - உலகம், இனிமை. அம் - அழகு.

பவானியில்-ராமு பிரஸ், பாரதி பவர் பிரஸ், ராசாம்ராம் பிரஸ் என்னும் அச்சகங்களும், குமாரபாளையத்தில் சண்முகாப் பிரசும் உள்ளன. (47)

53. கள்கமழ்பூங் காவிரியுங் கார்நிகர்வங் கிப்புரியுங்
கொள்கட னேர்வானி கூடலே—புள்குழுமிக்
காவலரைத் தேருங் களம்படர்ந்து மக்களூர்க்
காவலரைத் தேருங் களம்.

கள்கமழ் பூ காவிரி - தேன் கமழும் பூக்களையுடைய காவிரியாறு, கொள் கடல் நேர் - தான் நீர் கொண்ட கடலை ஒக்கும்; கடல் போல் வற்றுதது. முகில் கடலில் முகந்து வந்து பொழிந்ததே ஆற்று நீராதல் அறிக. அல்லது கடலைப் பொருந்தும்; கடல் சென்றடையும் பேராறு என்பதாம். கட்கமழ் என்பது இயல்பாக நின்றது. கள் - தேன். கமழ்தல் - மணத்தல். கரையினிலுள்ள சோலைப் பூக்கள் உதிர்ந்து நீரின்மேல் மிதந்து செல்லும்.

கார் நிகர் வங்கி புரி-மேகம்போல் உதவும் பாங்குகளின் செயல். கொள் கடன் நேர் - மக்கள் கொள்ளும் - கேட்கும் கடனைக் கொடுத்துதவும். வங்கி - பாங்கு - கடனுதவகம். புரி - செயல்.

பவானியில் அர்பன் பாங்கு, ஸ்டேட் பாங்கு, சௌத் இந்தியன் பாங்கு முதலிய பாங்குகள் உள்ளன. இவற்றுள் அர்பன் பாங்கு பழமையானது.

புள் குழுமி கா அலரைத் தேரும் - வண்டுகள் கூடிச் சோலையிலுள்ள பூக்களைத் தேன் நாடி ஆராயும். களம் படர்ந்து மக்கள் ஊர்க் காவலரைத் தேரும் - வாக்குச் சாவடிக்குச் சென்று மக்கள் ஊர் மன்றத்தினரைத் தேர்ந்தெடுப்பர். பொது மக்கள் ஊர் மன்ற உறுப்பினரையும், தலைவரையும் தேர்ந்தெடுப்பர் என்க.

புள் - வண்டு. கா - சோலை. களம் - இடம் - வாக்குச் சாவடி. படர்தல் - செல்லுதல். களம் - இடம். (48)

54. மங்கையர்பூண் பொன்னணிக்கும் மாமனைச்சு வர்ப்
செங்க லடுக்குந் திருநணு—செங்க [பணிக்குஞ்
மலக்கண்ணார் தங்கொழுநர் மாண்பிலினுந் தீங்க
மலக்கண்ணார் வாழ்வுமிகும் வாழ்வு.

மங்கையர் பூண் பொன் அணிக்கு செங்கல் அடுக்கும் - பெண்கள் அணிகின்ற தங்க நகைகட்குச் செந்நிறமுள்ள வைரக் கற்கள் பதிக்கும். அணி - காதணி, பதக்கம் முதலியன. மாமனைச் சுவர் பணிக்கு செங்கல் அடுக்கும் - சிறந்த வீட்டுச் சுவர் கட்டும் வேலைக்குச் செங்கல்லை அடுக்கும். அடுக்குதல் - ஒன்றன்மேல் ஒன்று வைத்தல்.

செம் கமலக் கண்ணார் - செந்தாமரை மலர் போன்ற கண்ணையுடைய மகளிர், தம் கொழுநர் மாண்பு இலினும் - தம் கணவர் நற்குணம் நற்செயல் நல்லொழுக்கம் இல்லா விட்டாலும், தீங்கு அமல கண்ணார் - தீமை நெருங்கக் கருதார். தீமை - அன்பு மாறுதல், தாய் வீடு செல்லல் முதலியன. வாழ்வு மிகும் வாழ்வு - நல்வாழ்வு வாழும் இடம். வாழ்வு - ஊர்.

அமலுதல் - நெருங்குதல், மிகுதல். கண்ணுதல்-கருதுதல். அவ்வாறு செய்ய எண்ணார் என்பதாம். (49)

55. வாரத் தயலாரை வண்டமிழ்ப்பா வின்சீரைச்
சேரத் தளைகொள் திருநணு—காரிருட்கண்
மின்றிரி கைபிடிப்பார் மெல்லிய லார்வளையு
மின்றிரி கைபிடிப்பார் வீடு.

வாரத்து அயலாரை சேரத் தளை கொள் - அன்பினால் பிறரைத் தம்மோ டொருங்குறப் பிணித்துக் கொள்ளும்; பிரியா நட்பினராக்கிக் கொள்ளும். பாவின் சீரைச் சேரத் தளை கொள் - வெண்பா முதலிய பாக்களின் சீரை இருசீர் ஒன்றுபடத் தளை என்னும் உறுப்பைக் கொள்ளும்.

வாரம் - அன்பு. அயலார் - பிறர். சீர் - மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர், கனிச்சீர் என்பன. தளை கொள்ளல் - நின்ற சீரின் ஈற்றசையையும் வருஞ் சீரின் முதலசையையும் இணைத்தல். அத்தளை - நேரொன் றாசிரியத் தளை, நிரை யொன் றாசிரியத் தளை முதலாக ஏழு வகைப்படும். அவற்றின் விரிவை யாப்பிலக்கண நூலிற் காண்க. எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பன செய்யுளுறுப்புக்களாகும்.

கார் இருட் கண் - மிக்க இருளின் கண், இரவில். மின் திரி கை பிடிப்பார் - மின் விளக்குப் பிடித்துக் கொண்டு வெளிச் செல்வார். மின் திரி - மின் கலம் (பேட்டரி). அது ஆகு பெயராய் மின் விளக்கை யுணர்த்திற்று. மெல்லியலார் வளையும் இன் திரிகை பிடிப்பார் - மட்கலம் வனைவோர் மகளிர் பாண்டம் வளையும் நல்ல சக்கரத்தைச் சுற்றுவார். பிடித்தல் - பற்றிச் சுற்றுதல். வீடு - இடம், (50)

**56. இக்கரம்பைக் கன்றதனு யேல்குறியெ திர்ப்பினரேய்**
**பக்கத்தின் மேவும் பவானியே—மக்கட்பண்**
**பாட்டிற்க ணிப்பார் பழந்தமிழர் வாழ்வையவர்**
**பாட்டிற்க ணிப்பார் பதி.**

இக்கு அரம்பைக் கன்று அதன் ஆய் பக்கத்தில் மேவும் - தேன் போல இனிக்கும் வாழைக் கன்று அதன் தாய் மரத்தின் பக்கத்தில் தோன்றும். ஏல் குறி யெதிர்ப்பினர் ஏய் பக்கத்து இல் மேவும் - குறி யெதிர்ப்புக் கொள்வோர் தகுதியான பக்கத்து வீட்டை யடைவர். இக்கு - தேன். அரம்பை - வாழை. இக்கு அரம்பை - தேன்போல இனிக்கும் பழமுடைய வாழை; 'தேன் கதலி' எனல் காண்க. ஆய் - தாய். குறியெதிர்ப்பு - அரிசி, பருப்பு, உப்பு, எண்ணெய் முதலியவற்றை அளவு குறித்து வாங்கி அவ்வளவே திருப்பித் தருவது. இது உலக வழக்கில் 'குறியாப்பு' என வழங்குகிறது.

மக்கள் பண்பாட்டிற்கு அணிப்பார் - மக்கட் பண்பாட்டை அணுகச் செல்வார்; பண்பாட்டின்படி நடப்பார் என்பதாம். பழந் தமிழர் வாழ்வை, அவர் பாட்டில் கணிப்பார் - அப் பழந் தமிழர் பாடியுள்ள பாட்டுக்களால் அறிவர். கணித்தல் - வரையறுத் தறிதல். பதி - ஊர். (51)

57. நற்றமிழுங் காளிங்க ராயன் பெரும்புகழுஞ்
சிற்றரங்கம் பாடுந் திருநணு—தெற்றெனவந்
துற்றூர்க்கு மாறூர் துணைசெய் திசையமிழ்தந்
துற்றூர்க்கு மாறூர் துணை.

நற்றமிழ் சிறு அரங்கம் பாடும் - நற்றமிழை அணைத் தோப்பிலுள்ள பூவை, கிளி முதலிய பறவைகள் பாடும். அரங்கம் - இடவாகு பெயர். காளிங்கராயன் பெரும் புகழ் சில் தரங்கம் பாடும் - காளிங்கராயன் பெரும் புகழை அணையிலும் வாய்க்காலிலும் வீசும் சிறிய அலைகள் பாடும்.

அலைகள் ஒலிப்பது அவன் புகழைப் பாடுதல் போலும். இது தற்குறிப் பேற்ற அணி. அணையும் வாய்க்காலும் அவன் புகழுக்கு அறிகுறியாக நின்று நிலவுகின்றன என்பதாம். தரங்கம் - அலை.

காளிங்கராயன் என்பான், பவானிக்கருகில், வானியாற்றில் கட்டப்பட்டுள்ள அணையைக் கட்டி, வாய்க்கால் வெட்டி நாட்டை வளஞ் செய்த ஓர் நல்லறிவாளன். அவ்வணையும் வாய்க்காலும் **காளிங்கராயன் அணை, காளிங்கராயன் வாய்க்கால்** என அப் பெருமகன் பெயராலேயே வழங்குகின்றன. அணையை அடுத்துள்ள **காளிங்கராயன் பாளையம்** என்பது, அவ்வள்ளலின் நினைவுக் குறியாக ஏற்பட்ட ஊராகும். அந் நற்செல்வன், தன் கைப்பொருள் கொண்டே அவ்வணையைக் கட்டி வாய்க்கால் வெட்டினுன் என்பது குறிப்பிடத் தக்கது. அவ்வாய்க்கால், பவானியிலிருந்து காவிரியை அடுத்தே மேல்புறமாகத் தெற்கு நோக்கி 58 கல் சென்று காவிரியில் கலக்கிறது. இவ்வாய்க்கால் 14 ஆயிரம் படி (ஏக்கர்) நிலங்கட்கு முப்போகமும் பாய்கிறது.

இவ்வள்ளல் வெள்ளோட்டுச் சாத்தந்தை குலத்தைச் சார்ந்த வேளாண்குடிச் செல்வன்; அதிவீர பாண்டிய மன்னனது (கி. பி. 1250-1280) அமைச்சனுக விளங்கியவன்.

“ எற்று திரைப்பொன்னி கூடுறு வானி யிடைமடங்க
வெற்றி மிகுந்த அதிவீர பாண்டிய வேந்தமைச்சன்
கற்ற வறிவினன் காளிங்க ராயன்செய் கால்கழிநீர்
உற்ற வனத்தை வளவய லாக வுயர்த்தியதே ”

(தனிப் பாட்டு)

எனவே, காளிங்கராயன் அணை, சுமார் 680 ஆண்டுகட்கு முன் கட்டப்பட்டதாகும்.

கோவைக் கோட்டம், பொள்ளாச்சிக் கூற்றத்து ஊற்றுக் குழிப் பாளையக்காரர் இக் காளிங்கராயன் வழியினராவர். அவர்கள் இன்னும் காளிங்கராயன் என்னும் பட்டப் பெயரை இட்டு வழங்கி வருகின்றனர். இந்நூல் 24-ஆம் பாட்டைப் பார்க்க.

அரங்கம் என்பது ஆற்றிடைக் குறை. அதாவது, ஆற்றின் இடையிலுள்ள நிலப் பகுதி. காவிரியாற்றில் மைசூர் நாட்டில் முதலரங்கமும், திருச்சிராப்பள்ளியை யடுத்துத் திருவரங்கமும் இருத்தல் போல, காளிங்கராயன் அணையை அடுத்துள்ள அணைத் தோப்பு, நாற்புறமும் நீர் சூழப் பெற்ற சிறிய நிலப் பகுதியாகையால் அதைச் சிற்றரங்கம் எனலாம்.

தெற்றென வந்து உற்றார்க்கு - உறுதியாக நம்பி வந்து அடைந்தவர்க்கு. மாறார் துணை செய்து-மறுக்காமல் உதவி. இசை அமிழ்தம் துற்று ஆர்க்கும் ஆரூர் - புகழாகிய அமிழ்தத்தை உண்டு களிக்கும் இயல்பினர்.

மாறார் - முற்றெச்சம். இசை - புகழ். துற்று - உண்டு. ஆர்த்தல் - களித்தல், மகிழ்தல். துணை - இடம். தங்கி வாழுந் துணையாக உள்ளது. (52)

58. கம்பாதி வித்துநருங் கைத்தொழிலு ஞற்றுநருஞ்
செம்பாடு செய்யுந் திருநணு—சம்பா
வரியெடுப்பார் செல்வ மனையெடுப்பார் பண்ணை
வரியெடுப்பார் செல்வ மனை.

கம்பு ஆதி வித்துநர் செம்பாடு செய்யும் - கம்பு முதலிய புன்செய்த் தவசங்கள் பயிர் செய்வோர் நிலத்தை ஈரம்போக உழுது புழுதியாக்குவர். செம்பாடு - ஈரம் போக உழுது உலர்த்திய புழுதி. 'தொடிப் புழுதி கஃசா உணக்கல்' (குறள்). கைத்தொழில் உஞற்றுநர் - கைத் தொழில் செய்வோர். செம்பாடு செய்யும் - செம்மையாக - சரியாக-வேலை செய்யும்; பொறுப்புணர்ந்து வேலை செய்வர் என்பதாம்.

சம்பா அரி எடுப்பார் - நெற்கட்டு எடுத்துச் செல்பவர். செல் அம்மனை. எடுப்பார் - அம்மனை யாடிக்கொண்டு

செல்வர். பண்ணை வரி எடுப்பார் - மருத நிலப் பண் பாடுவர்.

பண்ணை - வயல். வரி - இசைப் பாடல். வரி எடுத்தல்- பாட்டுப் பாடுதல். பண்ணை - மகளிர் விளையாட்டு. பண்ணை வரி - விளையாட்டுப் பாட்டு என்றுமாம்.

செல்வ மனை - அத்தகைய செல்வ மிக்க ஊர். மனை - ஊர்.

சம்பா - ஒரு வகை நெல். அரி - நெற்கட்டு. அம்மனை- ஒரு மகளிர் விளையாட்டு. அது, மூன்று பெண்கள் மரத்தால் செய்த அம்மனைக் காய் கொண்டாடுதல். இருந்தாடும் அதை, இவர்கள் நெற்கட் டெடுத்துக் கொண்டு நடந்து கொண்டே ஆடுவர் என்பதாம். செல் + உழி-செல்வுழி என்று புணர்வது போல, செல் + அம்மனை - செல்வம்மனை என்று புணர்ந்தது. அம்மனை - அமனை - தொகுத்தல் விகாரம். (58)

59. கற்குந் தமிழ்வாயுங் காவிரிவா னிப்பாயுந்
தெற்கொந்தி நிற்குந் திருநகு—நற்கந்த
சாமிகல்வி மன்றமது சார்குமர பாளையத்துக்
காமிகல்வி மன்றமது காப்பு.

கற்கும் தமிழ்வாய் தென் கொந்தி நிற்கும் - தமிழ் கற்கும் வாய் இனிமை மிக்கிருக்கும். தென் - இனிமை. கொந்து தல் - மிகுதல். காவிரி வானி பாய் - காவிரியும் வானியும் ஒன்று கூடும் இடம். பாயும் - பாயும் இடம் - கூடுதுறை. தெற்கு ஒந்தி நிற்கும் - ஊரின் தெற்கில் இருக்கும்.

கந்தசாமி கல்வி மன்றம் அது சார் - கந்தசாமி கல்வி மன்றம் உள்ள, குமாரபாளையத்துக்கு, மிகல் ஆம் வி மன்ற காப்பு - சிறப்பாகும் அழகு மிக்க ஊர். சிறப்பு - 'பவானிக் குமாரபாளையம்' என அடைமொழியாகச் சொல்லப்படும் சிறப்பு.

மிகல் - சிறப்பு. வி - அழகு. மன்ற - மிகுதி குறிக்கும் இடைச் சொல். மன்ற மது. மது - அசை.

கந்தசாமி கல்வி மன்றம் உள்ள குமாரபாளையத்துக்கு 'பவானிக் குமாரபாளையம்' என அடைமொழியாகச் சொல்

லப்படும் சிறப்பாகும் அழகுமிக்க ஊர் திருநணு எனக் கூட்டுக.

**கந்தசாமி கல்வி மன்றம்** என்பது, குமாரபாளையம் திரு. ஜ. கு. கந்தசாமி செட்டியார் அவர்களின் நினைவாக, அவர் தம் மக்கள், குமாரபாளையம் உயர்நிலைப் பள்ளி, ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி (B. T. கல்லூரி) இவற்றிற்காக, நன் கொடையாகக் கட்டிக் கொடுத்திருக்கும் பெரிய கட்டிடம்.

பவானி, காவிரியாற்றின் மேல்கரையில் உள்ளது. குமார பாளையம், காவிரியாற்றின் கீழ்கரையில் உள்ளது. இரண்டூர் களும் காவிரிப் பாலத்தால் இணைக்கப்பட்டுள்ளன. (54)

**60.** **பொழுதலரை நல்லாரும் பூஞ்சேற்றி லூருங்**
**கொழுதணிந்து செல்வானி கூடல்—உழுத**
**கருமைநிறச் சேற்றுவயற் காதங் கமழுங்**
**கருமைநிறச் சேற்றுவயற் காப்பு.**

பொழுது அலரை நல்லார் கொழுது அணிந்து செல் - அன்று பூத்த பூக்களை மகளிர் பறித்துச் சூடிச் செல்லும். பூ சேற்றில் ஊரும் கொழு தணிந்து செல் - பொலிவுள்ள அல்லது பூப் போல மணக்கும் சேற்றில் உழுகின்ற கொழு ஆழ்ந்து செல்லும்.

பொழுது அலர் - நாட்பூ-அன்று அலர்ந்த பூ. நல்லார்- பெண்கள். பூ - பொலிவு. கொழுதுதல் - பறித்தல்.

வயல் உழுத கரு மை நிறம் சேறு - வயலில் உழுத கரு நிறமுள்ள எருமையின் உடலில் ஒட்டிய சேறு, காதம் கம ழும் - நெடுந்தூரம் மணக்கும். கருமை நிறச் சேற்று வயல் காப்பு - அவ்வாறு மணக்கும், கருமை நிறமுள்ள சேற்றை யுடைய வயல் சூழ்ந்த ஊர்.

மை-எருமை. நிறம்-உடல். காதம்-நெடுந்தூரம். (55)

**61.** **கல்வித் துறையவருங் காணிநில முள்ளவருஞ்**
**செல்வத் தமிழார் திருநணு—இல்வித்தை**
**யேற்றத்தாழ் வில்லா ரினியதமிழ் மக்களிடை**
**யேற்றத்தாழ் வில்லா ரிருப்பு.**

கல்வித் துறையவர் செல்வம் தமிழ் ஆர் – கல்வி கற்ப வர் வளவிய தமிழ் மொழியைப் பயில்வர். காணி நிலம் உள்ளவர் செல்வத்து அமிழார் – சொந்த நிலமுள்ளவர் செல்வச் செருக்குக் கொள்ளார்.

ஆர்தல் – பயில்தல். காணி – உரிமை. 'காணியாளர்' எனல் காண்க.

இல் வித்தை ஏற்றத்து ஆழ்வு இல்லார் – குடும்ப வருவாயை வளரச் செய்யும் முயற்சியில் குறையார். தமிழ் மக்களிடை ஏற்றம் தாழ்வு இல்லார் – தமிழ் மக்களிடத்து உயர்வு தாழ்வு கருதார். இருப்பு – ஊர். இல் – குடும்பம். வித்து – காரணம். குடும்ப வளர்ச்சிக்குக் காரணம் – வருவாய். (56)

62\. உற்றமழைக் காலையிலு மொல்லியரூர்ச் சாலையிலுஞ்
சிற்றி லிழைக்குந் திருநணா—உற்றுப்
படித்துறையு மாறுமமை பாங்குமிங்கூர் முற்றும்
படித்துறையு மாறுமமை பாங்கு.

மழை உற்ற காலையில் சிறு இல் இழைக்கும் – மழை பெய்த காலையில் சிறிய ஓலை வீடுகளைப் பிரித்து வேய்வர். ஒல்லியர் ஊர்ச் சாலையில் சிற்றில் இழைக்கும் – சிறுமியர் ஊர்த் தெருவில் மணல் வீடு கட்டிக்கொண்டு விளையாடும்.

உற்று படித்து உறையு மாறும் அமை பாங்கும் – வெளி யூர்களிலிருந்து வந்து, படித்துக் கொண்டு உண்டு உறையு மாறு அமைந்த உணவு விடுதியும். பவானியிலும் குமார பாளையத்திலும் மாணவரில்லங்கள் – உணவு விடுதிகள் – உள்ளன. இங்கு ஊர் முற்றும் படித்துறையும் ஆறும் அமை– இங்கே ஊர் நெடுகப் படித்துறைகளும் அப் படித்துறைகள் உள்ள ஆறும் அமைந்துள்ள. பாங்கு – இடம். (57)

63\. கற்றுணர்ந்த மேலோர் கடியுநவுஞ் செய்யுநவுஞ்
சிற்றினஞ் சேராத் திருநணா—முற்றுலகப்
பாளையத்தார் போற்றுமென்னூர்ப் பட்டுத் தொழிற்குமர
பாளையத்தார் போற்றும் பதி.

கற்றுணர்ந்த மேலோர், கடியுந சில் தினம் சேரா — தகாதவை என நீக்குவன ஒருநாட்கூடப் பொருந்தா. கற்ருேர் கடிவன வற்றை ஒருநாளும் செய்யார் என்பதாம். செய்யுந சிற்றினம் சேரா - நல்லவை கீழ் மக்களைச் சேரா. கடியுந - நீக்குவன - தகாதவை - கெட்டவை. செய்யுந - நல்லவை. முற்று உலகப் பாளையத்தார் போற்றும் - உலகமாகிய ஊர் முழுதும் போற்றும். பாளையம் - ஊர். உலகப் பாளையம் - உலகமாகிய ஊர் - உலகம். மெல் நார்ப் பட்டுத் தொழில் குமரபாளையத்தார்-மெல்லிய நார்ப்பட்டுத் தொழிற் றிறம் உடைய குமாரபாளையத்தார். தொழில் திறம் - வேலைப்பாடு.

நார்ப்பட்டுத் துணி நெய்வதில் குமாரபாளையம் தனிச் சிறப்புடையதாகும். இத்தொழில் இவ்வளவு வேலைப்பாட்டுடன் இந்தியாவில் வேறு எங்கும் நடைபெறுவதில்லை. கைத்தறியில் இத்தகைய வேலைப்பாடு உலகிலேயே இல்லையெனலாம்.

போற்றும் பதி - 'பவானிக் குமாரபாளையம்' என உரிமையுடன் கூறும் ஊர் - திருநணு என்பதாம். பதி - ஊர். (58)

64. செழுங்கழனிக் காலுமிளஞ் செம்மாருந் தாரும்
பழங்கழனி மைக்கும் பவானி—புழங்கு
மடைக்கலம்பு துக்குவார் மண்கொளுங்காற் றூம்பின்
மடைக்கலம்பு துக்குவார் வைப்பு.

(1) செழுங் கழனிக் கால் பழங் கழனி மைக்கும் — செழிய வயலிடைப் பாயும் வாய்க்கால் பழைய வயலை இளகச் செய்யும். (2) இளஞ் செம்மார் பழங்கழல் நிமைக்கும் - சக்கிலிச் சிறுவர்கள் பழைய செருப்புக்கு மெருகிடும். (3) தாருப் பழம் கழனி மைக்கும்-மா பலா முதலிய பழங்கள் வயலில் விழுந்து அழுகி மக்கும்.

கழனி - வயல். கால் - வாய்க்கால். மைத்தல் - இளகுதல். செம்மார் - சக்கிலியர். தாரு - மரம். தாருப் பழம் என்பது தாரும் பழம் என மெலித்தல் விகாரம். நிமைத்தல்— மெருகிடல், மினுக்குதல் (பாலீஷ் போடுதல்).

புழங்கும் மடைக்கலம் புதுக்குவார் - வீட்டில் புழங்குகின்ற மட்கலங்கள் செய்வார். மண் கொளுங் கால் - களிமண் எடுத்துவரச் செல்லும் போது, மடைத் தூம்பின் கல் அம்பு துக்குவார் - மடை மதகின் பாவு கல்லிலிருந்து விழும் நீரைக் குடிப்பர். கல் - மடையி லிருந்து மதகின் வழியாய் வரும் நீர் தள்ளி விழும்படி, மதகின் வெளியே நீட்டி வைத்திருக்கும் கல். அக் கல்லின் மீதிருந்து விழும் நீரைக் குடிப்பர் என்க.

மடை - சோறு. மடைக்கலம் - சோற்றுப் பானை. இங்கு பொதுவாக மட்கலத்தைக் குறிக்கும். புதுக்குதல்-புதிதாகச் செய்தல். தூம்பு - மதகு. மடை - நீர்த் தேக்கம். அம்பு - நீர். துக்குதல் - குடித்தல். வைப்பு - ஊர். (59)

65. தங்குறையை நாடுநருந் தைக்கிழித்தட் டாடுநருஞ்
செங்கரத்தை நோக்குந் திருநணு—வெங்கண்
மருத்துவஞ் செய்வார் மகிழநோய் நாடி
மருத்துவஞ் செய்வார்தம் வாழ்வு.

தம் குறையை நாடுநர் செம் கரத்தை நோக்கும் - தமது குறையைத் தீர்த்துக் கொள்ள எண்ணுவோர் ஈவோரின் செவ்விய கையைப் பார்க்கும். தை கிழித்தட்டு ஆடுநர் செங்கரத்தை நோக்கும் - தை மாத நிலாவில் கிழித்தட்டு விளையாடுவோர் செங்கரத்தை நோக்கும்.

குறை - இன்மை. தை - தைமாதம். இது விளையாடு தற்கேற்ற நல்ல நிலாக் காலம். கிழித்தட்டு - ஒரு வகை விளையாட்டு. செங்கரம் - நெடுங்கரங்களுக்குச் சரிநடுவில் குறுக்கேயுள்ள நேர்கோடு. கரம் - கோடு. இரண்டு நெடுங் கரங்களுக் கிடையே, அச்செங்கரத்தின் இரு பக்கமும் உள்ள இடம் வீடு எனப்படும். நெடுங்கரத்தைக் கடக்க, வீட்டுக்கு வீடு அங்குமிங்கும் ஓடுவோரைச் செங்கரத்தில் தொடலாம். அதற்காகவே- கட்டுவோர் முட்டுவோரைத் தொட - செங் கரத்தை நோக்கும். கிழித்தட்டு - 'தட்டுக்கரம்' எனவும் வழங்கும்.

வெங்கண் மரு துவ அஞ்சு எய்வார் மகிழ - நோய் விருந்துபோல் உடம்பை உண்ண உடல் வருந்துவார் மகிழும்படி. நோய் நாடி மருத்துவம் செய்வார் தம் வாழ்வு -

அவர்தம் நோயை ஆராய்ந்தறிந்து மருத்துவம் செய்வார்- மருத்துவர் (டாக்டர்) வாழ்விடம்.

வெங்கண் - நோய். மரு - விருந்துணவு. புது மருமக னுக்கு மாமியார் இடும் விருந்தை-'மருவலம்' எனல் கொங்கு நாட்டு வழக்கு. துவ - துவ்வ - உண்ண. அஞ்சு - நிலம் நீர் தீ காற்று வெளி என்னும் ஐம்பெரும் பூதங்கள். இவ் வைம்பெரும் பூதங்களாலானதே உடம்பு. 'பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்' (குறள் - 271) என்பது காண்க. அஞ்சு - உடம்பு. ஐந்து-அஞ்சு-போலி. எய் - வருத்தம். எய்வார்- வருந்துவார்.

பவானியிலும் குமாரபாளையத்திலும் நாட்டாண்மைக் கழக மருத்துவ சாலை மருத்துவர்களும், பவானியில் நாலைந்து தனி மருத்துவர்களும் உள்ளனர். (60)

66. அம்பலகு கோடுநரும் ஆடிநீ ராடுநருஞ்
செம்புன லாடுந் திருநணு—வம்புக்
கரும்புகை கண்டுவக்குங் கான்முளைநட் பட்டிற்
கரும்புகை கண்டுவக்குங் காப்பு.

அம்பு அலகு கோடுநர் செம்புனல் ஆடும் - அலகு குத்திக் கொள்வோர் குருதி யொழுக ஆடும். ஆடிநீர் ஆடுநர் செம்புனல் ஆடும் - ஆடிப் பதினெட்டன்று கூடு துறையில் குளிப்போர் புது நீரில் குளிப்பர். ஆடி மாதத்தில் காவிரியிலும் வானியிலும் புது வெள்ளம் வரும்.

அம்பு அலகு - கூரிய கம்பி. அலகு - கூர்மை. இது, அலகு என்றே வழங்குகிறது. அலகு கோடல் - உடம்பில் அலகு குத்திக் கொள்ளல்.

வம்பு கரும்பு கை கண்டு கான்முளை உவக்கும் - தாயின் கையில் இனிய கரும்பைக் கண்டு பிள்ளை மகிழும். தோட்டத் திலிருந்து தாய் கரும்பு கொண்டு வருவாள். சந்தை அல்லது கடையில் வாங்கி வருதலுங் கொள்க. நட்பு அட்டில் கரும் புகை கண்டு உவக்கும் - நண்பர்கள் சமையலறையில் மிக்க புகையைக் கண்டு மகிழும். தொலைவில் வரும்போதே வீட் டுக் கூரைமேற் கிளம்பும் புகையைக் கண்டு வீட்டரசியார் வீட்டிலிருப்பதைக் கண்டு உவக்கும் என்க.

நட்பு-நண்பரும் சுற்றத்தாரும். அட்டில்-சமையலறை. கருமை-பெருமை. வீட்டுக் கூரைமேல் கிளம்புவதால் மிக்க புகையாகும். கரிய புகையுமாம். காப்பு - ஊர். (61)

**67.** **உய்யுமுயிர் வாயடையு மொண்புலவர் வாயிடையுஞ்**
**செய்யுட் பிறக்குந் திருநணு—பொய்யுரைகாண்**
**செல்லாண்டி யம்மன் றிருவிழாக் காணுது**
**செல்லாண்டி யம்மன் றிரு.**

உயிர் உய்யும் வாயடை செய்யுள் பிறக்கும் - உயிர் உடலோடு கூடி வாழ்தற் கேதுவாகிய உணவு சமையலறையில் உண்டாகும்; உணவுப் பொருள், செய் உள் - நிலத்தில் விளையும். இஃதொரு வகைச் சிலேடை. வாயடை - உணவு. உணவுப் பொருள். செய் உள் - சமையல் செய்யும் அறை, நிலத்தில். செய் - நிலம். உள் - இல்; ஏழனுருபு.

ஒண்புலவர் வாயிடை செய்யுள் பிறக்கும் - சிறந்த புலவர்கள் வாயின்கண் தமிழ்ச் செய்யுட்கள் தோன்றும்.

பொய்யுரை காண் - நீ சொல்வது பொய். செல்லாண்டி யம்மன் திருவிழாக் காணுது, அம்மன் செல்லாண்டி-தலைவன் செல்லமாட்டான். திரு - என்பாள் திருநகர்.

இது, தலைவன் பிரிவா னென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது. 'பிரிந்து செல்வான்' என்றதால், 'அம்மன்' எனத் தலைவனைப் பிறன்போலக் கூறினுள். அம்மன் - அவன்-தலைவன். என்பாள் என்பது இசை யெச்சம். திரு- செல்வம், அழகு. அது ஆகுபெயராய் அவை பொருந்திய ஊர்க்கானது. சினையாகு பெயர்.

செல்லாண்டி யம்மன் திருவிழா, பவானியில் மாசி மாதத்தில் நடக்கும் ஒரு சிறந்த திருவிழா. (62)

**68.** **மாலுமயிற் சாயலையும் வாயிலையு மேர்செய்யுங்**
**கோலக் குழல்வானி கூடலே—பாலொடுநற்**
**கண்டுண் டுவப்பார் கனிவாய் விருந்துண்ணக்**
**கண்டுண் டுவப்பார் களம்.**

மாலும் மயில் சாயலை கோலக் குழல் ஏர் செய்யும் - அழகிய மயில் போன்ற சாயலையுடைய பெண்ணை அழகிய தலைமயிர் அழகு செய்யும். வாயிலை கோலக் குழல் ஏர் செய்யும்- வீட்டு வாயிலைக் கோலக் குழல் அழகு செய்யும்.

மால் - அழகு. ஏர் - அழகு. கோலம் - அழகு. குழல் - தலைமயிர். கோலக்குழல் - கோலம் போடுங் குழல்.

பாலொடு நல்கண்டு உண்டு உவப்பார் - பாலும் சர்க்கரையும் உண்டு மகிழ்வார். கனிவாய் விருந்து உண்ண கண்டு உண்டு உவப்பார் - கனிவாக விருந்தினர் உண்பதைக் கண்டு தாமும் உண்டு மகிழ்வார்.

கண்டு - சர்க்கரை. நல்கண்டு - வெள்ளைச் சர்க்கரை (அஸ்கா). காப்பி, தேநீர் முதலானவுங் கொள்க. கனிவாக - மகிழ்வாக. விருந்து - விருந்தினர். விருந்தினர் மகிழ்வாக உண்பதைக் கண்டு தாமும் உண்டு மகிழ்தல் குடிப்பிறந்தார் பண்பாகும். இதனுல், விருந்து புறத்ததாத் தாமுண்ணுமை பெறப்படும். கனிவாய் - கோவைக்கனி போன்ற வாய். ‘கனி வாய் விருந்து உண்ணக் கண்டு’ என்னும் நயத்தையறிக. களம் - இடம். (63)

69. ஒய்யாப் பசிப்பொருளை யொவ்வுலகப் பேரிருளைச்
செய்யோ னகற்றுந் திருநகு—எய்யாத
வம்பன்ன கையார் வறியோர் மனம்புழுங்க
வம்பன்ன கையார் மனை.

ஒய்யா பசிப்பொருளை செய்யோன் அகற்றும் - நீங்காத பசியை நிலத்துக் குரியவன் போக்கும். ஒவ்வுலகப் பேர் இருளை செய்யோன் நகற்றும் - பொருந்திய உலகத்தின் மிக்க இருளைச் சூரியன் ஒளியுடையதாக்கும்.

ஒய்யா - ஒய்யாத - நீங்காத. பசிப்பொருள் - பசியாகிய பொருள். பசியை, பொருள் என்றது இகழ்ச்சி. ஒவ்வுதல் - பொருந்துதல். ஒவ்வுலகப் பேரிருள் - உலகின்கண் பொருந்திய மிக்க இருள். செய் - நிலம். நகல் - ஒளி.

எய்யாத அம்பு அன்ன கையார் - மூங்கில் போன்ற கையையுடைய மகளிர், வறியோர் மனம் புழுங்க - எளியவர் மனம் வருந்த, அம் பல் நகையார் - அழகிய பல்தோன்றச் சிரித்திகழார்.

அம்பு - மூங்கில். எய்யாத அம்பு - வெளிப்படை. புழுங்குதல் - வருந்துதல். தம்பால் வந்திரக்கும் வறியோர் மனம் வருந்தும்படி இகழார் என்பதாம். மனை - இடம். (64)

70. ஏர்தருமூர் மன்றினுக்கு மேயகலை வென்றினுக்குந்
தேர்தல் நடக்குந் திருநணு—சோர்தல்
அரும்பா வினையா ரறம்பொரு ளின்பந்
தரும்பா வினையார் தலம்.

ஏர்தரும் ஊர் மன்றினுக்கு தேர்தல் நடக்கும் - அழகு பொருந்திய ஊராட்சிக் கழகத்திற்குத் தேர்தல் நடக்கும். ஏய கலை வென்றினுக்கு தேர்தல் நடக்கும் - பொருந்திய கல்வியின் வெற்றிக்குத் தேர்தல் நடக்கும்.

ஏர் - அழகு. தேர்தல் - ஊர்மன்ற உறுப்பினரையும் தலைவரையும் தேர்ந்தெடுக்கும் தேர்தல். ஏய - பொருந்திய. கலை - கல்வி. வென்றி - வெற்றி. தேர்தல் – பரீட்சை. கலை வெற்றி - கல்வித் தேர்ச்சி. வென்றிஇன் உ கும். இன் உ - சாரியை.

சோர்தல் அரும்பா வினையார் – சோர்வில்லாத தொழிலாளர், அறம் பொருள் இன்பம் தரும் பாவின் ஐ ஆர் - திருக்குறள் கற்று மேன்மை யடைவார்.

திருக்குறளுக்கு ‘முப்பால்’ என்னும் பெயருண்மையால், ‘ அறம் பொருள் இன்பம் தரும்பா ’ எனப்பட்டது. அம்மூன்றுங் கூறுதல் காரணம். ஐ - உயர்வு, மேன்மை. தலம் – இடம். (65)

71. தம்மெருவை மாக்களுக்குஞ் சார்ந்தறிஞர் மக்களுக்குஞ்
செம்மறி வாக்குந் திருநணு — தம்ம
வரைப்பேணி வாழ்குவார் மாநிலமீக் கூற்றின்
வரைப்பேணி வாழ்குவார் வைப்பு.

தம் எருவை மாக்களுக்கு செம்மறி வாக்கும் – தமது சாணியை விளை நிலங்களுக்குச் செம்மறியாடுகள் வழங்கும். அறிஞர் சார்ந்து மக்களுக்கு செம் அறிவு ஆக்கும் – அறிஞர்கள் அடிக்கடி போந்து மக்களுக்குச் சிறந்த அறிவை உண்டாக்குவர்.

மா – நிலம். விளை நிலம் – நன்செய் புன்செய் என இரு வகைப் படுதலின் ‘ மாக்கள் ’ எனப் பன்மை கூறப்பட்டது. செம்மறிவு – நல்லறிவு – பகுத்தறிவு. ‘மாக்கள் மக்கள்’ என்னும் நயங்காண்க.

தம்மவரை பேணி வாழ்குவார் – தம் இனத்தவரை, சுற்றத்தினரைப் போற்றி வாழ்வார். மாநில மீக்கூற்றின் வரைப்பு ஏணி வாழ்குவார் - உலகப் புகழின் எல்லையிலுள்ள ஏணிப்படிமேல் வாழ்வார்.

மாநிலம் - உலகம். மீக்கூற்று - புகழ். மீக்கூற்றின் வரைப்பு – புகழின் எல்லை. மீக்கூற்றின் வரைப்பு ஏணி – புகழின் எல்லையிலுள்ள ஏணிப்படி. ஒப்பிலா மிக்கபுகழெய்தி வாழ்வார் என்பதாம். வைப்பு - ஊர். (66)

72\. ஏடணியூர் முப்பாலு மேழிசையை யெப்பாலும்
பாடப் பழகும் பவானியே—நீடுவயல்
ஏர்பூட்டி யோட்டுவா ரெய்ப்பதனை யின்மொழியார்
ஏர்பூட்டி யோட்டுவா ரில்.

ஏடு அணி ஊர் முப்பாலும் பாடு அப்பு அழகும் - மேன்மையும் அழகும் பொருந்திய ஊரின் மூன்று புறமும் ஒலிக்கின்ற நீர் அழகு செய்யும். ஏழ் இசையை எப்பாலும் பாட பழகும் – தமிழிசை ஏழையும் எல்லாப் பக்கமும், ஆண் பெண் எல்லோரும் பாடுதற்குப் பழகும்.

ஏடு - மேன்மை. அணி - அழகு. முப்பால் - கிழக்கு தெற்கு மேற்கு ஆகிய மூன்று புறம். ஏழிசை – குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. பாடுதல் – ஒலித்தல், பாடுதல். அப்பு – நீர்.

நீடுவயல் ஏர் பூட்டி ஓட்டுவார் எய்ப்பதனை - பெரிய வயலின்கண் ஏரோட்டுவார் இளைப்பினை, இன் மொழியார் – இனிய சொல்லையுடைய மனைவியர். ஏர்பு ஊட்டி ஓட்டுவார்– எழுச்சியை ஊட்டிப் போக்குவார். இல் – இடம்.

எய்ப்பு – இளைப்பு, களைப்பு. ஏர்பு - எழுச்சி, மனவெழுச்சி – ஊக்கம். மனவெழுச்சியை உண்டாக்கிக் களைப்பைப் போக்குவரென்க. (67)

73\. உங்கோல மெல்லியரு மூராளுந் துல்லியருஞ்
செங்கோல்கைக் கொள்ளுந் திருநணு—நங்கோவைக்
கோட்டத் தலைநகருங் கூடுதுறை யாடுநருங்
கோட்டத் தலைநகருங் கூடு.

உம் கோல மெல்லியர் செம்கோல் கைக்கொள்ளும் - உயர்ந்த அழகிய மகளிர் உலக்கையைக் கைக் கொள்வர். ஊராளும் துல்லியர் செம்கோல் கைக் கொள்ளும் – ஊரை யாளும் தக்கோர் முறையினை மேற்கொள்ளும்.

உம்கோலம் – உயர்ந்த அழகு. மெல்லியர் - பெண்கள். செம்கோல் - நேர்கோல் - உலக்கை. மையெழுதுங் கோலு மாம். துல்லியர் - தக்கோர். செங்கோல் - முறை – நீதி, ஆட்சிமுறை. நாடாளுந் தக்கோருங் கொள்க.

நம் கோவைக் கோட்ட தலை நகரும் - நமது கோவைக் கோட்டத்தின் தலைநகரும், கூடுதுறை ஆடுநர் – கூடுதுறை யில் நீராடுவோர், உங்கு ஓட்டத்து அலை நகரும் - அங்கு மிங்கும்,நீந்துவதால் அலையடிக்கும். கூடு - இடம். தலை நகராகிய அலையடிக்கும் இடம் திருநணா என்க.

கோவைக் கோட்டமும் சேலங் கோட்டமும் ஒன்றாக - ஒரே கோட்டமாக - இருந்தபோது, பவானி அதன் தலை நகராக இருந்தது. (68)

74. வம்பார்வா ழைக்காலும் மாதெங்கங் காப்பாலுஞ்
செம்போத்து மேவுந் திருநணா — அம்பாலைப்
பண்ணாரப் பாடுவார் பாடிப்பொன் னித்துறையிற்
றண்ணாரப் பாடுவார் சார்பு.

வம்பு ஆர் வாழைக் கால் செம்போத்து மேவும் – தேன் பொருந்திய வாழை மரத்தின் அடியில் சிவந்த பக்கக் கன்று கள் தோன்றும். மா தெங்கு காப்பால் செம்போத்து மேவும்- மாந் தோப்பிலும் தென்னந் தோப்பிலும் செம்போத்து என்னும் பறவை இருக்கும்.

வம்பு – தேன். ஆர் - பொருந்திய. கால் – அடிப்பாகம், தெங்கு அம். அம் - சாரியை ; அழகிய என்றுமாம். போத்து- பக்கக் கன்று. செம்போத்து - ஒரு பறவை.

அம் பாலைப் பண் ஆரப் பாடுவார் – அழகிய பாலைப் பண்ணைப் பொருந்தப் பாடுவார். பாடி பொன்னித் துறையில் தண் ஆர் அப்பு ஆடுவார் – அங்ஙனம் படி காவிரியாற்றில் குளிர்ச்சி பொருந்திய நீரில் குளிப்பார்.

அம்-அழகிய. பாலைப்பண் - ஒரு வகைத் தமிழ்ப்பண். பண்-இசை(ராகம்). ஆர-பொருந்த. பொன்னி-காவிரி. தண் ஆர்-குளிர்ச்சி பொருந்திய. அப்பு-நீர். சார்பு-இடம். (69)

75. **வன்னப்பூ ஞாணர்களும் வண்டமிழ்ப்பா வாணர்களுஞ்**
**சின்னப்பூச் சூடுந் திருநணா-இன்னலொருங்**
**கோட்டையரண் செய்யுங் குடியுடைய தூராட்சிக்**
**கோட்டையரண் செய்யுங் குடி.**

வன்னப்பூ ஞாணர்கள் சின்ன பூ சூடும்-அழகிய பூங் கொடி போன்ற மகளிர் மல்லிகை, முல்லை இருவாட்சி முதலிய சிறிய பூக்களைச் சூடுவர். வண்டமிழ் பாவாணர்கள் சின்னப் பூ சூடும்-வண்டமிழ்ப் புலவர்கள் சின்னப்பூ என் னும் பாமாலையைச் சூட்டுவர்.

வன்னம்-அழகு. ஞாண்-கொடி. ஞாணர்-கொடி போன் றவர். சின்னப்பூ தமிழிலுள்ள 96 வகை நூல்களுள் ஒன்று. அது மலை, ஆறு, நாடு முதலிய பதிற்றுறுப்பை (தசாங்கம்) நேரிசை வெண்பா 100, 90, 70, 50 ஆகப் படுதல். சூடும்-சூட்டும். தமிழன்னைக்குச் சூட்டுவர்.

ஞாணர்களும்-ரகரத்தைத் கெடுத்து, ஞாணகளும்-நேர் நிரை நேர்-கூவிளங்காய் ஆகக் கொள்க. வாணர்களும் என் பதையும் இங்ஙனமே கொள்க.

இன்னல் ஒருங்கு ஓட்டு ஐயர்-மக்கள் துன்பம் முழுவ தையும் போக்குகின்ற பெரியோர்கள். அண் செய்யும் குடி உடையது-துணை செய்யும் குடிமக்களை உடையது. குடிமக் கள் துன்பத்தைப் போக்கித் துணை செய்யும் பெரியோர்களை யுடையது என்க. ஊராட்சிக் கோட்டை அரண் செய்யும் குடி-ஊராட்சிக் கோட்டை என்னும் ஊர் பாதுகாப்புச் செய்யும் ஊர். பெரியோர்களையுடையதும் ஊராட்சிக் கோட்டை பாதுகாப்புச் செய்யும் ஊரும் திருநணா என்க.

அண்-அண்மை-துணைமை. அரண்-பாதுகாப்பு. ஊராட் சிக்கோட்டை என்பது, பவானிக்கு இரண்டு கல் வடக்கில் உள்ள ஊர். இவ்வூர் ஒரு குன்றின் அடிவாரத்தில் இருக் கிறது. அக்குன்று ஊராட்சிக் கோட்டை மலை எனப்படும். இங்கு இடிந்த கோட்டை ஒன்று இருக்கிறது. கட்டிமரபினர்

ஆட்சிக் காலத்தே இங்கு பவானிக் கோட்டையின் பாது காப்புப் படை இருந்து வந்தது. மூன்று பக்கமும் நீரரண் உள்ள பவானிக்கு இது மலையரண் ஆகும். பண்டு இது 'நண்ணுமலை' என்று வழங்கிற்று. முகவுரை பார்க்க. அரண் செய்யும், முன்பு. குடி-ஊர். (70)

76. ஓர்த்தறி சிருர்க்காண்டுக் கோர்முறையும் பன்முறையுந்
தேர்த்திருநாள் மேவுந் திருநணு-கார்த்திகைமு
னையாறு மாடுவார் நட்புலவத் தந்தமரி
னையாறு மாடுவார் நட்பு.

ஓர்த்து அறி சிருர்க்கு ஆண்டுக்கு ஓர் முறை தேர்த்து இருநாள் மேவும்-கல்வி பயில்கின்ற மாணவர்களுக்கு ஆண் டுக்கு ஒரு முறை மேல் வகுப்புக்கு அனுப்பும் பெருநாள் வரும். ஆண்டுக்கு பன்முறை தேர்திரு நாள் மேவும்-ஆண் டில் பல முறை தேர்த்திருநாள் நிகழும்.

ஓர்த்தல்-உணர்தல். ஓர்த்து அறிதல்-உணர்ந்தறிதல். சிருர்-மாணவர். தேர்த்தல்-தெளிவித்தல். அறிவுத் தெளி வைத் தந்து மேல் வகுப்புக்கு அனுப்புதல். இரு-பெரிய. இருநாள்-பெருநாள். மேல் வகுப்புக்குச் செல்லுதல் மாண வர்க்குப் பெருநாளாதல் அறிக.

பவானியில்-பங்குனியில் இரண்டு தேரும், சித்திரையில் இரண்டு தேரும், மாசியில் செல்லாண்டியம்மன் தேரும் ஓடு கின்றன.

கார்த்திகை முன் ஐயாறும் ஆடுவார்-ஐப்பசி மாதம் முப்பது நாளும்-முழுதும்-கூடுதுறையில் நீராடுவர். இது, துலாக்காவிரி, துலாமுழுக்கு எனப்படும். துலா மாதம்-ஐப்பசி மாதம். கார்த்திகை முன்-ஐப்பசி. வெளியூரினர் பலர் பவானியில் வந்து தங்கித் துலாக்காவிரி யாடுவர். நட்பு உலவ தம் தமர் இல்-அன்பு பொருந்தத் தமது சுற்றத் தார் குடும்பம், நை யாறு மாடு வார் - நைந்தபோது பொருள் வழங்குவார். நட்பு-அன்புகொண்டு வாழும் இடம்.

நட்பு - அன்பு. தமர் - சுற்றம். இல் - குடி - குடும்பம். நைதல் - பொருள் குறைதல் - வறுமையுறுதல். மாடு - பொருள். வார்த்தல் - வழங்குதல். வார்ப்பார் என்பது, வார் என முதனிலையாக நின்றது. (71)

77. திண்ணியபாட் டாலையிலுஞ் சிற்றுண்டிச் சாலையிலும்
பண்ணியஞ் செய்யும் பவானியே - கண்ணிய
மாகத் திகழ்வார் மனையலதை யஃதியங்கு
மாகத் திகழ்வார் மனை.

திண்ணிய பாட்டு ஆல் ஐயில் பண் இயம் செய்யும் - சிறந்த பாட்டின் மிக்க இன்பத்தை இசையும் இசைக் கருவிகளும் செய்யும். சிற்றுண்டிச் சாலையில், பண்ணியம் செய்யும் - பலகாரம் செய்யும்.

திண்ணிய - சிறந்த. ஆலுதல் - இன்புறுதல். ஐயில்-மேல், மிக்க. ஆல் ஐயில் - மிக்க இன்பம். பாட்டின் மிக்க இன்பம். பண் - இசை. இயம் - இசைக்கருவிகள். அவை - யாழ், வீணை, கின்னரம், புல்லாங்குழல், மத்தளம், தாளம் முதலியன.

கண்ணியமாக திகழ்வார் - பிறர் மதிக்கும்படி நடந்து கொள்வார், மனை அலதை - இல்வாழ்வுக்குத் தகாததை, அஃது இயங்கும் மாகத்து இகழ்வார் - அது நிகழும் தொலைவிலேயே இகழ்ந்து விலக்குவார்; அணுகவிடார்.

மனை - இல்வாழ்க்கை. மனையறம் எனக் காண்க. மனை அலது - இல்வாழ்க்கைக்குத் தகாதது, கெட்டது. மாகம் - தூரம். தகாத காரியத்தைச் செய்யார் என்பதாம். மனை - இடம். (72)

78. மும்மையறி வாளுநரும் மொய்ம்மலருங் கைம்மலருஞ்
செம்மைக்கட் டங்குந் திருநணு - இம்மைப்
பயனிகழ வுள்ளார் பதிபுகழுஞ் செல்வப்
பயனிகழ வுள்ளார் பதி.

(1) மும்மை அறிவு ஆளுநர் செம்மைக்கண் தங்கும் - முக்காலத்தையும் ஒருங் காராய்ந்தறியும் நுண்ணறிவுடையோர் நன்னெறிக்கண் நிற்கும். (2) மொய்மலர் செம்மை கள் தங்கும் - செழிய மலரில் சிறந்த தேன் பொருந்தியிருக்கும். (3) கைமலர் செம் கண் மை தங்கும் - கையில் செவ்வரி படர்ந்த கண்ணுக்கு எழுதும் மை இருக்கும். மை எழுதுங் கோலுங் கொள்க.

மும்மை யறிவாளர் - அறிவர்; "மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன்" (தொல், புறத் 20) என்பது காண்க. மொய்மலர் - செழியமலர்.

இம்மைப் பயன் இகழ உள்ளார் - பிறர் இகழும்படியான காரியத்தைச் செய்ய நினையார்; பதி புகழும் செல்வப் பயன் நிகழ உள்ளார் - உலகம் புகழும்படியான செல்வம் பொருந்தவுள்ளார். பிறர்க்குப் பயன்படுவதால், உலகத்தார் புகழ்வரென்க.

இம்மை - இப்போது, உலகில் வாழுங்காலம். இம்மைப் பயன் - பயன், செய்யுங்காரியம். பயன் இகழ - இகழ் பயன். இகழ்பயன் - பிறர் இகழத்தக்க காரியம். பதி - உலகம், ஊர். (73)

79. பாமே வியற்சீரும் பைங்கட் குயிலாருந்
தேமாப் பயிலுந் திருநாணு - தாமேவன்
பாலிப்பார் மூடப் பழக்கவழக் கங்களைந்து
பாலிப்பார் வாழும் பதி.

பா மேவு இயற்சீர் தேமா பயிலும் - வெண்பா முதலிய பாக்களில் பொருந்தும் இயற்சீர் 'தேமா' என்னும் வாய்பாட்டால் வழங்கும். பைங்கண் குயிலார் தேமா பயிலும் - கரியகண்ணையுடைய குயில் தேமா மரத்தில் தங்கியிருக்கும்.

இயற்சீர் - ஈரசைச்சீர். அது, தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என நால்வகைப்படும். அவற்றுள் தேமா ஒன்று. தேமா - ஒருவகை மாமரம். (74)

80. நெல்லாதி காக்குநரும் நீத்தங் கடக்குநருஞ்
செல்லோடத் தேறுந் திருநணு - கல்லா
மகவளர்த்த வில்லார் மடியின்றிக் குன்று
மகவளர்த்த வில்லார் மனை.

நெல் ஆதி காக்குநர் செல் ஓட தேறும் - நெல்முதலிய தவசங்களைப் பழுதுபடாமல் காப்பவர் செல் என்னும் பூங்சிகள் போகும்படி தெள்ளும், நீத்தம் கடக்குநர் செல் ஓடத்து ஏறும் - ஆற்று வெள்ளத்தைக் கடப்பவர் அக்கரைக்குப் போகின்ற பரசலில் ஏறும்.

செல் - நெல், சோளம், பயிறு முதலியவற்றி லுண்டாகும் சிறு பூச்சி. உழு எனவும்படும். பரசல் - படகு.

கல்லா மகவு வளர்த்தல் இல்லார் - கல்லாமல் பிள்ளையை வளர்க்கார். மடி இன்றி குன்ரு மகம் வளர்த்தல் இல்லார் - சோம்பலின்றிச் குறையாத இன்பத்தினை வளர்க்கும் இல்வாழ்க்கையை உடையார்.

மடி - சோம்பல். குன்ருத - குறையாத. மகம் - இன்பம். இல் - இல்வாழ்வு. மனை - இடம். (75)

81. பாவலரும் பாத்தோயும் பாவலரும் பாத்தலகு
பாவடியிற் கொள்ளும் பவானியே—பாவையர்பூங்
காவிரிவா யாடுங் களங்காத் தமிழ்பாடிக்
காவிரிவா யாடுங் களம்.

பாவலர் பாத்து பா அடியில் அலகு கொள்ளும் - புலவர்கள் அசைபிரித்துப் பாக்களின் அடிகளில் அலகு கொள்ளும். பாத்தோயும் பா வலர் பாத்து பாவடியில் அலகு கொள்ளும் - துணிநெய்யும் பாத்தோயும் பாவில் வல்லவர் பா நூல்களைப் பிரித்துப் பாவடியில் அலகு கொள்ளும்.

பாவலர் - பாட்டுப்பாடும் புலவர். புலவர்கள் அலகு கொள்ளல் - பாட்டின் அடியிலுள்ள சீர்களை அசைபிரித்து வாய்பாடு கண்டு தளைகூறுதல். பாட்டின் அடி - குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி எனஐந்து வகைப் படும். சீர் - மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர், கனிச்சீர் என நான்கு வகைப்படும். அசை - நேரசை, நிரையசை யென இருவகைப்படும். இவற்றின் விரிவை யாப்பிலக்கண நூலில் காண்க.

பாத்தோய்வோர் அலகு கொள்ளல் - பாவடிக் கற்களின் மேல் பாவை இழுத்துக் கட்டி, கஞ்சி போட்டு, பாவின் பிணிகளில் அலகு கோல்களைப் பாய்ச்சி, மேலும் கீழும் இழுத்து, கஞ்சி தோய்த்த பா நூலைத் தனித்தனியாக் குதல். பாத்தோயும் பா வலர் - பாத்தோய்வதில் வல்லவர் ; மிகுந்த பயிற்சி யுள்ளவர். பாத்தோய்தல் - பாவுக்குக் கஞ்சி போடுதல். பாத்தோயும் பா வலர் - பாவுக்குக் கஞ்சிபோட்டுப் பாவைப் பக்குவஞ் செய்வதில் வல்லவர்.

பாவையர் பூங்காவிரி வாய் ஆடும் - பெண்கள் அழகிய காவிரியில் நீராடுவார். களம் கா தமிழ் பாடி - சங்கத்தார் காத்த தமிழைப் பாடிக் கொண்டு, கா விரிவாய் ஆடும் - மரங்கள் அடர்ந்துள்ள சோலையில் விளையாடுவர். கா - மரம். விரிதல் - அடர்தல், பரவுதல். வாய் - இடம். காவிரிவாய் - சோலை, தோப்பு. இது, ஊரின் மேல்புறம், காளிங்கராயன் அணைக்கட்டுக்கு அருகில் உள்ள அணைத்தோப்பு. (இந்நூலின் 57, 89 பாட்டுக்களைப் பார்க்க.) ஆறும் காவும் ஆடுவர் என்க.

களம் - சங்கம். கா தமிழ் - காத்த தமிழ். சங்கப்புலவர்கள் காத்த தமிழ். களம் - இடம். (76)

82. இல்லாண்மை யூரருங்கை யேரரும்பைங் கூழுண்ணச்
செல்லாமை போக்குந் திருநணு—கல்லூரி
மாணவரா லிப்பார் வளமுறுதல் கண்டுள்ள
மாணவரா லிப்பார் வளம்.

இல்லாண்மை ஊரர் செல்லாமை போக்கும் - குடும்பத்தை யாளுந்தன்மையை மேற்கொண்டவர் வறுமையைப் போக்கும். கை ஏரர் பைங்கூழ் உண்ண செல் ஆ மை போக்கும் - உழவுத் தொழில் செய்வோர் பயிரை உண்ண வரும் மாடு ஆடு எருமை முதலியவற்றை ஓட்டும்.

இல் – குடும்பம். இல் ஆண்மை – குடும்பத்தை ஆளுந் தன்மை. ஊர்தல் – மேற்கொள்ளல். இல்லாண்மை ஊரர் - மேம்பாடுறக் குடும்பம் நடத்துவோர். கை – செயல். பைங் கூழ் – பயிர். செல்லாமை – வறுமை. ஆ - மாடு. மை - ஆடு, எருமை.

கல்லூரி மாணவரால் - மாணவர் செய்யும் சமூகத் தொண்டினுல், இ பார் வளமுறுதல் கண்டு – இந்நாடு முன் னேற்ற முறுதல் கண்டு. உள்ளம் மாண் அவர் ஆலிப்பார் - மனமாட்சி யுடைய பெரியோர்கள் மகிழ்வர். ஆலித்தல்- மகிழ்தல்.

குமாரபாளையத்தில் உள்ள ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி மாணவர்கள் சமூகநலத்தொண்டு செய்வார்கள். வளம் - வளமுடைய ஊர். (77)

83. வெண்பஞ் சுமிவிதையை வீடுறுபுன் மாப்புதையைத்
திண்பொறிவே றுக்குந் திருநணா—பண்பொதிந்த
வாயார் களைகளைவார் வாழ்வறுநர் பூம்பழன
வாயார் களைகளைவார் வாழ்வு.

வெண்பஞ்சு உமி விதையை திண்பொறி வேறு ஆக்கும் - வெண்ணிறமுள்ள பஞ்சையும் கொட்டையையும் உமியையும் அரிசியையும் வலிய இயந்திரம் வெவ்வேருகப் பிரிக்கும்.

விதை - பருத்திக் கொட்டை, அரிசி. பஞ்சாலையிலும் நெல்லாலையிலும் இச்செயல்கள் நிகழும். பவானியில்– ஆனந்தாமில், ஆண்டவர் ரைஸ்மில், தனலட்சுமி மில், முருகானந்தா மில், ராஜா மில் என்னும் ஆலைகள் உள்ளன.

வீடு உறு புன்மா புதையை திண்பொறி வேல் தாக்கும் - வீட்டினுள்புகும் எலி முதலிய தீமை செய்யும் உயிர்களை வலிய பொறியும் வேலும் தாக்கும். புன்மா–புல்லிய உயிர்கள். அவை – எலி, பெருச்சாளி, பாம்பு முதலியன. புதை - உடம்பு. பொறி - எலிப்பொறி, பெருச்சாளிப் பொறி, மின்பொறி முதலியன. வேல் - குத்துக்கோல். குத்துக்கோலால் குத்துவர்.

பண் பொதிந்த வாயார் - இனிமையான சொல்லையுடைய மகளிர். வாழ்வு அறுநர் களை களைவார் – வறுமையால் வாழ்விழந்தோரின் துன்பத்தைப் போக்குவர். பூம்பழனவாய் ஆர் களை களைவார் - அழகிய வயலின் கண் உள்ள புற்களைப் பிடுங்கி யெறிவர். வாழ்வு - வாழுமிடம். பண் - இசை. களை - துன்பம். (78)

84. மானுர்வாய்ச் செம்மொழியும் வண்டினம்பூங் காவழியுந்
தேனுடிச் செல்லுந் திருநணா—மேனுடர்
ஒப்பித் தகன்று ரிமையதற் குத்தம்மை
ஒப்பித் தகன்றூர்வா ழூர்.

மானுர்வாய் செம்மொழி தேன் ஆடி செல்லும் - மான் போன்ற மகளிர் வாயிலிருந்து வரும் செவ்விய சொல் இனிமை பொருந்தியிருக்கும். வண்டினம் பூங்கா வழி தேன்

நாடி செல்லும் - வண்டுகள் சோலையின் இடத்திற்குத் தேனை நாடிச் செல்லும். தேன் - இனிமை. வழி - இடம்.

மேல்நாடர் உரிமை ஒப்பித்து அகன்ருர் - வெள்ளைக் காரர் இந்நாட்டுரிமையை நம்மிடம் ஒப்பித்துச் சென்ருர், அதற்கு - அந்நாட்டுரிமைப் போர்க்கு ; அதாவது, வெள்ளைக்காரர் ஒப்பித்தகலுமுன் (1947 க்கு முன்) நடத்திய உரிமைப் போர்க்கு. தம்மை ஒப்பித்த கன்ருர் வாழ் ஊர் - தம்மை ஒப்படைத்த முதிர்ந்த நாட்டுத் தொண்டர்கள் வாழ்கின்ற ஊர். கன்றுதல் - முதிர்தல். கன்ருர் - கன்றினூர். (79)

**85.** **ஈடறுநல் லார்தாளு மின்னிசைகேட் பார்நாளும்**
**பாடகஞ் சேரும் பவானியே—நாடக**
**மாடுமரங் காக்கு மகநீ ரிடையேகு**
**மாடுமரங் காக்கு மகம்.**

ஈடு அறு நல்லார் தாள் பாடகம் சேரும் - ஒப்பில்லாத நற்குணமுள்ள மகளிர் கால்கள் பாடகம்என்னும் அணிகலம் பொருந்தும். இன்னிசை கேட்பார் நாளும் பாடு அகம் சேரும் - இனிய இசையைக் கேட்போர் நாடோறும் இசை பாடும் இடம் செல்லும்.

ஈடு - ஒப்பு. பாடகம் - ஒரு காலணி. பாடகம் - இசையரங்கு.

நாடகம் ஆடும் அரங்கு ஆக்கும் - நாடக அரங்கு உண்டாக்கும். அகநீரிடை - ஆற்று வெள்ளத்தில், ஏகும் ஆடும் மரம் காக்கும் - செல்லும்போது ஆடுகின்ற பரசலைக் கவிழாமல் காக்கும்.

அகநீர் - வெள்ளம். மரம் - மரக்கலம் - கப்பல். இங்கு பரசல். அத்தகு பயிற்சியுடையரென்க. இசை நாடகத் தமிழ் போற்றுதல் பெறப்படும். அகம் - ஊர். (80)

**86.** **குறுங்கரும்புட் காடுஞ்செய்க் கோடுங் கொழுவால்**
**நறுங்குவளை மேவு நணுவே—மறுகெங்குந்**
**துப்புரவு செய்வார் துறைபடுநோய் வேரறுத்**
**துப்புரவு செய்வார் துறை.**

குறும் கரும்புள் காடு நறும் குவளை மேவும் - சிறிய வண்டுக் கூட்டம் மணம் பொருந்திய குவளை மலரைப் பொருந்தும். செய்க்கோடு கொழுவால் நறுங்குவளை மேவும்- வயலின் வரப்பின்கண், கலப்பையின் கொழுவால் நறுங்கிய சங்குகள் பொருந்தும்.

கரும்புள் - வண்டு. காடு - கூட்டம். செய் - வயல். கோடு - வரப்பு. வளை - சங்கு. கொழுவால் நறுங்கிய சங்குகள் வரப்பில் ஒதுக்கப்படும்.

மறுகு எங்கும் துப்புரவு செய்வார் - தெருவெங்கும் சுத்தம் செய்வார். துறைபடுநோய் வேர்அறுத்து புரவு செய்வார் - பல வகையான நோய்களும் அணுகாமல் பாது காப்பவராவர்.

மறுகு - தெரு. துப்புரவு - சுத்தம் ; தெருவைக் கூட்டிச் சுத்தம் செய்தல். துறைபடல் - பலவகைப்படல். புரவு செய்தல் - காத்தல். வேரறுத்தல் - நோய்களை அடியோடு போக்குதல். ஊர்நலப் பாதுகாவலர் துப்புரவுத் தொழிலாளரேயாவர். துறை - இடம். (81)

87. வண்மைச்செந் தண்ணடைக்கும் வாலறிவர் நம்மிடைக்குந்
திண்மைத்தொண் டாற்றுந் திருநணு—பெண்மைக்
குணங்குறையா நல்லார் குறிப்பறிந்து வாழ்க்கைக்
குணங்குறையா நல்லார் குடி.

வண்மைசெம் தண்ணடைக்கு திண் மை தொண்டு ஆற்றும் - வளப்பம் பொருந்திய சிறந்தவயலுக்கு வலிய எருமைக் கடாக்கள் உழவுத் தொழில் புரியும். வாலறிவர் நம் இடைக்கு திண்மை தொண்டு ஆற்றும் - உண்மை யறிவாளர் நம் நாட்டிற்கு வலிய தொண்டு செய்வர். 'வன்றெண்டர்' எனல் காண்க.

செம்மை - நன்மை. தண்ணடை - வயல். வால் அறிவு- உண்மையறிவு. நம்இடை - நாம் வாழும் இடம் - நம்நாடு. மை - எருமை.

பெண்மை குணம் குறையா நல்லார் - பெண்மைக் குணத்திற் குறையாத மகளிரின், குறிப்பு அறிந்து வாழ்க்கைக்கு உணங்கு உறையா நல்லார் குடி - குறிப்பறிந்து

அவர்கள் வாழ்க்கையில் வருத்தம் சேராத நல்ல கணவரது ஊர்.

குறையா - குறையாத. நல்லார் - பெண்கள், நல்ல கணவர். உணங்குதல் - வருந்துதல். உணங்கு - வருத்தம். உறையா - உறையாத - தங்காத - சேராத. மனைவியரின் குறுப்பறிந்து அவர் தம் வாழ்க்கையில் வருத்தம் சேராதபடி நடந்து கொள்ளும் நல்ல கணவர். குடி - ஊர். (82)

88. தண்ணடைக்குப் பல்காலுந் தானைவெளுப் பார்மேலும்
வண்ணம் படுக்கும்ப வானியே—எண்ணத்
திரைக்காட்சி காண்பார் சிறுபோது போக்காத்
திரைக்காட்சி காண்பார்தஞ் சேர்பு.

தண்ணடைக்கு பல்கால் வண் அம்பு அடுக்கும் - வயலுக்குப் பல வாய்க்காலினின்று நிறைய நீர் பாயும். தானை வெளுப்பார் மேலும் வண்ணம் படுக்கும் - துணி வெளுப்போர் நன்கு வண்ணம் செய்யும்.

கால் - வாய்க்கால். தானை - ஆடை, துணி. மேலும் - மிகவும் - நன்கு. வண்மை - வளம். அம்பு - நீர். பவானிக்கு மேல்புறம் (1) காளிங்கராயன் வாய்க்கால், (2) அதற்கு மேல் புறம் கீழ்பவானி வாய்க்கால், (3) வடபுறம் மேல்கரை மேட்டூர் வாய்க்கால், (4) கீழ்புறம் கீழ்கரை மேட்டூர் வாய்க்கால் என்னும் நான்கு வாய்க்கால்கள் பாய்கின்றன. வண்ணம் - சலவை.

எண்ணத்து இரைக்கு ஆட்சி காண்பார்-ஆராய்ச்சியுடன் உணவுப் பொருளை உண்டாக்கும் பயிற்சியை மேற்கொள்வார். சிறு போது போக்கா திரைக்காட்சி காண்பார்- கொஞ்ச நேரம் பொழுது போக்காகப் படக்காட்சி காண்பர்.

எண்ணம்-ஆராய்ச்சி. இரை-உணவு. ஆட்சி-பயிற்சி. புதிய ஆராய்ச்சி முறைப்படி பயிர் செய்ய முயல்வர் என்பதாம். சிறுபோது போக்கா-சிறிது நேரம். திரைக்காட்சி- சினிமா. பவானியில்- மோகன் பாலஸ், ராயல் தியேட்டர் என்னும் கொட்டகைகளும், குமாரபாளையத்தில் முருகன் தியேட்டரும் உள்ளன. சேர்பு-ஊர். (83)

89. மொய்த்தன்று தேடியதை மூக்குலமு மாக்குலமும்
வைத்தின்று வாழும்ப வானியே-தைத்திருநாட்
கூடலிறை கொள்ளுங் குடிமக்கள் சாறயர்ந்து
கூடலிறை கொள்ளுங் குடி.

மொய்த்து அன்று தேடியதை மூக்குலம் வைத்து இன்று வாழும்-இளமைப் பருவத்தே தேடிய பொருளை முது மைப் பருவமுடையோர் கைமுதலாகவைத்து இப்போது வாழும். ஆக்குலம் வை தின்று வாழும் - மாடுகள் வைக் கோலைத் தின்று வாழும்.

மொய்-வலிமை. மொய்த்து அன்று-உடல் வலியுள்ள இளமைப் பருவத்தே. மூக்குலம்-முதியோர். ஆ-மாடு. வை-வைக்கோல்; மற்ற புல்லும் தட்டுங் கொள்க.

குடிமக்கள் தைத்திருநாள் சாறு அயர்ந்து கூடல் இறை கொள்ளும்-ஊர் மக்கள் தைத் திருநாளில் திருநாட் கொண்டாடி அணைத்தோப்பில் தங்குவர். கூடலிறை கொள்ளும் குடி- சங்கமேச்சுரர் கோயில் கொண்டுள்ள ஊர்.

தைத்திருநாள்-பொங்கல் திருநாள். சாறு-திருநாள். அயர்தல்-கொண்டாடுதல். சாறு அயர்தல்-திருநாட் கொண் டாடுதல். கூடல்-தோப்பு. இங்கு, அணைத்தோப்பு. இது, ஊர்க்கு மேல்புறம் காளிங்க ராயன் அணைக்கட்டுக்குப் பக்கத்தில் இருக்கிறது (57-ஆம்பாட்டைப் பார்க்க). இறை கொள்ளல்-தங்குதல். தைப் பொங்கல் திருநாளில், கரிநா ளன்று ஊர் மக்கள் அணைத்தோப்பில் சென்று தங்கி அத் திருநாளைக் கொண்டாடுவர். இவ்வூர் மக்கட்கு இது ஒரு சிறந்த மனமகிழ் திருநாளாகும். கூடலிறை-சங்க மேச்சுரர். இது, திருநணுச் சிவன் பெயர்.

90. நம்பிமுயல் வாரகத்தும் நன்மனத்தும் பைம்புலத்துஞ்
செம்பருத்தி பூக்குந் திருநணு-வெம்பசிக்கா
காரம் பயில்வார் கலைக்குச் சிலப்பதி
காரம் பயில்வார் களம்.

நம்பி முயல்வார் அகத்து செம்பு அருத்தி பூக்கும் - நம் பிக்கை கொண்டு முயல்வார் வீட்டில் விரும்பப்படும் பொன்-செல்வம் உண்டாகும். நல் மனத்து செம்பு அருத்தி பூக்கும்- நல்ல மனத்தில் விரும்பப்படும் பொருள் உண்டாகும். பைம்

புலத்து செம்பருத்தி பூக்கும் - விளை நிலத்தில் நல்ல பருத்திச் செடி பூக்கும்.

அகம்-வீடு. செம்பு-பொன், பொருள். அருத்தி-விரும்பப்படும் பொருள். வீட்டில் பொன்னும் மனத்தில் விரும்பப்படும் பொருளும் உண்டாகும். நிரனிறையணி. எண்ணியஎண்ணியாங்கெய்தும் என்க. செம்பருத்தி-பூணூல் பருத்திச் செடி. செம்பருத்தி என்னும் பூச் செடியுமாம்.

வெம் பசிக்கு ஆ கார் அம்பு அயில்வார்-மிக்க பசிக்காக மழை நீரை உண்பார். கலைக்கு சிலப்பதிகாரம் பயில்வார்.

வெம்பசி-மிக்கபசி; மக்களைப் பல கெட்ட செயலுஞ் செய்விக்கும் கொடிய பசி. கார்-மழை. அம்பு-நீர். 'பசிக்கு ஆகாரம்' என்னும் நயங்காண்க. கலைக்கு-கலைப்பசிக்கு. பயில்வார்- படிப்பார். வெறுந்தண்ணீரைக் குடித்துப் பசி தணியும் வறுமை நிலையினரும் சிலப்பதிகாரம் படிப்பர் என்பதாம். 'செவிக்குண வில்லாத போழ்து சிறிது வயிற்றுக்கு மீயப் படும்' என்னும் குறட்கருத்துங் கொள்க. களம்-இடம். (85)

91. அய்துமழிப் பார்குழலை யாவுணுமென் பூவிழலைக்
கொய்துமழிப் பார்வானி கூடலே-பெய்துமலர்
கோவில் வழிபடுவார் கொட்கும் கயவர்கடங்
கோவில் வழிபடுவார் கூறு.

அய்து மழிப்பார் குழலை கொய்து மழிப்பார்-நன்கு சவரஞ் செய்வார் மயிரைக் கத்தரித்து நீக்குவார். ஆ உணும் மென்பூ விழலை கொய்து மழிப்பார்-மாடு உண்ணும் மெல்லிய பூவையுடைய புல்லை அறுத்து மொட்டையாக்குவார்.

ஐது-மென்மையாக-நன்கு. மழித்தல்-சவரஞ் செய்தல். குழல்-மயிர். கொய்து மழித்தல்-தலை மயிரைக் கத்தரித்து முகமயிரை முழுதும் நீக்குதல். கொய்தல்-நறுக்குதல். மழித்தல்-மொட்டையடித்தல். ஆ-மாடு. விழல்-புல். மென் பூ விழல்-மெல்லிய பூ வுடைய புல்-சீமைப்புல்.

மலர் பெய்து கோவில் வழிபடுவார்-மலர் தூவிக் கோவிலில் பூசனை செய்வார். தேங்காய் பழம் முதலியன படைத்தலுங் கொள்க. கொட்கும் கயவர்கள் தம் கோ இல் வழி படுவார்-சுற்றித்திரியும் கீழ்மக்களுடைய கண்கள் படாத வழியில் செல்வர்.

கொட்குதல்-சுற்றித்திரிதல். கயவர்கள்-கீழ்மக்கள். கோ-கண். கயவர்கள் கண் படாத வழியில் செல்லல்-ஒப்பனையின்றிச் செல்லுதல். ஒப்பனை-அலங்காரம். கீழ்மக்கள் பார்க்கும்படி ஆடையணிகளால் தம்மை அலங்காரம் செய்து கொள்ளாமல் வெளிச் செல்லுதல் குலமகளிர்க் கழகாகும். கூறு-இடம். (86)

92. பம்பிளஞ்சேய் காலகத்தும் பாவையர்கை கானகத்துஞ்
செம்பஞ்சு பூசுந் திருநணு-தம்புலமை
யுள்ளத் தனைய ரொழுங்கொடுகற் றொண்புலவர்
உள்ளத் தனைய ருறை.

பம்பு இளஞ்சேய் கால் அகத்து செம்பு அஞ்சு பூசும்-இளங் குழந்தைகள் காலின்கண் செம்பு முதலிய ஐம் பொன்னாற் செய்யப்பட்ட ஐவண்ணக் காப்புப் பொருந்தும். பாவையர் கை கால் நகத்து செம்பஞ்சு பூசும்-பெண்கள் கை கால் நகங்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பு பூசுவர்.

பம்புதல்-மிகுதல். பம்பிளமை-மிக்க இளமை. ஐவண்ணக் காப்பு-பஞ்சவர்ணக் காப்பு. இளங் குழந்தைகளுக்கு, செம்பு பொன் வெள்ளி இரும்பு ஈயம் என்னும் ஐவகைப் பொன்னாற் செய்யப்பட்ட கால் காப்பணிதல் வழக்கம். செம்பஞ்சு-நகங்களுக்குப் பூசும் செம்பஞ்சுக் குழம்பு.

தன் ஐயர் தம் புலமை உள்ள-தமது தமையன்மார் தமது அறிவுச் சிறப்பை எண்ணி வருந்த. தாம் அங்ஙனம் கற்று அறிவைப் பெறவில்லையே என்று வருந்துவரென்க. ஒழுங்கொடு கற்று-ஒழுங்காகக் கற்று. ஒண்புலவர் உள்ளத்து அனையர்-சிறந்த புலவர்கள் எவ்வாறு ஒருவர் இருக்க வேண்டும் என்று எண்ணுகிறார்களோ அத்தகைய அறிவொழுக்க முடையவர். புலவர் அங்ஙனம் எண்ணி, அவ்வாறு பாடுதல் புலவருலகம் எனப்படும்.

புலமை-அறிவு. உள்ள-எண்ண. தன் ஐயர்-தமையன்மார். 'முன்னின்று மொய்யவிந்தார் என்னையர்' (புறப்பொருள் வெண்பாமாலை) என் ஐயர்-எனது தமையன்மார் எனல் காண்க. (87)

93. இடுகலைகற் றச்சினரு மேரினரு மாரு
நடுகன்னல் வெட்டு நணுவே-நெடுகக்
கொழுநருட ளுடுவார் கோடலைப்பொன் கொள்ளக்
கொழுநருட ளுடுவார் கூறு.

இடு கலை கல்தச்சினர் ,நடு கல் நல் வெட்டும்-சிற்பக் கலைத் தொழில் செய்யும் சிற்பியர் வீரர்களுக்கு நடும் கல்லில் வீரருடைய பேரும் புகழும் செதுக்கும். ஏரினர் ஆரும் நடு கன்னல் வெட்டும்-உழவர்கள் தகுதியான நடு கின்ற கரும்பினை வெட்டுவார்.

இடுதல்-செய்தல். கலை-சிற்பக்கலை. இடு கலை-செய் கின்ற சிற்பக்கலைத் தொழில். நாட்டுக்காகப் போர்புரிந்து உயிர்விட்ட வீரர்களுக்கு நடுகல் நாட்டிப்பெருமைப்படுத்தும் வழக்கம் தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரே தமிழ் நாட்டில் இருந்துவந்தது (தொல், புறத் 5). பெரியார்களுக்கு நினைவு மண்டபம் கட்டுவதும் இத்தகையதே. ஏரினர்-உழவர். தகுதியான கரும்பு-நடுதற்குத் தகுதியான கரும்பு.

நெடுக கொழுநருடன் ஆடுவார்-படித்துறையில் நெடுக ஆண்களும் பெண்களுமாக நீராடுவர். கொள் தலைப் பொன் கொள்ள கொழுநர் உடன் நாடுவார்-தலையில் வைத்து முழுகுங் காசை எடுக்கச் சிறுவர்கள் உடனே தேடுவர்.

கொள் தலை-கோடலை. பொன்-காசு. ஆடிப்பதினெட் டுப் போன்ற நன்னாட்களில் கூடுதுறையில் நீராடுவோர் தலையில் காசை வைத்து முழுகுதல் வழக்கம். அந்தக் காசு களைச் சிறுவர்கள் தண்ணீரில் மூழ்கித் தேடுவர். கொழுநர்-சிறுவர். கூறு-இடம். (88)

94. பாவையர்வாய்ப் பாற்கணிப்பும் பாப்பிணைப்பும் பைங் [கிள்ளை
கோவையுண னேர்வானி கூடலே—காவற்
பணிமனையிற் செய்யும் பதிபுரப்பா ராட்சிப்
பணிமனையிற் செய்யும் பதி.

பாவையர் வாய்ப்பாற்கு அணிப்பு பைங்கிள்ளை கோவை உணல் நேர் - பெண்கள் இதழுக்குச் சிவப்புச் சாயம் பூசுதல் கிளி கோவைப் பழம் உண்ணுதலை ஒக்கும். பால் - பகுதி. வாய்ப்பால் - இதழ். அணிப்பு - அழகு செய்தல். இதழுக்குச் சிவப்புச் சாயம் பூசும்போது, சிவப்புச் சாயம்

பூசிய விரல்களின் நகங்கள் கிளிமூக்குப்போல் தோன்றும். அதனால், அது கிளி கோவைப் பழத்தை உண்பதை ஒக்கும். இதழ் - கோவைப்பழம். நகம் - கிளிமூக்கு.

பா பிணைப்பு கோ வை உணல் நேர் - துணி நெய்யும் பாத் தீர்ந்து விட்டால், புதுப்பாவை அக்குறைப்பாவுடன் பிணைத்தல் மாடு வைக்கோல் தின்பதை ஒக்கும். கோ. மாடு. வை-வைக்கோல். குறைப்பாவில் தொங்குகின்ற நூல்களை எடுப்பது மாடு வைக்கோலைத் தின்ன எடுப்பது போல் தோன்றும்.

பதிபுரப்பார் ஆட்சிப் பணிமனையில் செய்யும் காவல் பணி - ஊரினையும் நாட்டினையும் ஆளும் அதிகாரிகளும் அலுவலாளர்களும் தத்தம் பணிமனைகளில் செய்யும் அரசியல் வேலைகளை, மன் ஐயில் செய்யும் - மிகவும் நன்கு செய்யும்.

பதி - ஊர், நாடு. பதிபுரத்தல் - ஊரினையும் நாட்டினையும் காத்தல். புரத்தல் - காத்தல். காத்தலாவது - தத்தம் அலுவல்களைப் பொறுப்புடன் செய்து, குற்றங் குறை நேரா வண்ணம் குடிமக்களைப் பாதுகாத்தல். பதிபுரப்பார் - ஆட்சியாளர். அவர் - பலவகை அரசியல்துறை அதிகாரிகளும் அலுவலாளர்களுமாவர்.

ஆட்சிப் பணிமனை - அலுவலகம் - ஆபீஸ். காவல்பணி - அரசியல் வேலைகள். அரசு - காவல். பணி - வேலை. பதி - ஊர்.

பவானியிலுள்ள ஆட்சிப் பணிமனைகளாவன: ஊராட்சி மன்றம், கூற்றப் பணிமனை (தாலூகா ஆபீஸ்), துணைத் தீர்ப்புக் களரி (சப் மாஜிஸ்ட்ரேட்), உள்ளாவணக் களரி (சப் ரிஜிஸ்தார் ஆபீஸ்), காப்பகம் (போலீஸ் ஸ்டேஷன்), மின்சார நிலையம், உழவுப் பணிமனை (விவசாய ஆபீஸ்), துணைப் பொறித் துறையகம் (அஸிஸ்டன்ட் இஞ்சினீயர் ஆபீஸ்), துணை விற்பனை வரியகம் (D. C. T. O. ஆபீஸ்), பள்ளித்துணை ஆய்வகம் (டிப்டி இன்ஸ்பெக்டர் ஆபீஸ்), வட்டப் புகையிலை வரியகம் (புகையிலை வரிச் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஆபீஸ்), துப்புரவாய்வகம் (சானட்டரி இன்ஸ்பெக்டர் ஆபீஸ்), அஞ்சலகம் (போஸ்டாபீஸ்) பழுது பார்ப்புக் கண்காணிப்பகம் (P.W.D. சூப்ரவைசர் ஆபீஸ்),

தொலைப்பேசி மாற்றகம் (டெலிபோன் எக்ச்சேஞ்சு ஆபீஸ்), மீன் வளர்ப்புக் கண்காணிப்பகம் ஆகியவை. (89)

95. பொங்குஞ் சுரும்பினமும் புல்லருந்து மானினமுஞ்
செங்கழுநீ ருண்ணுந் திருநஞு—அங்குறுநாள்
அஞ்சலகத் தேபெறுவ லஞ்சலெனு மஞ்சலினை
அஞ்சலகத் தேபெறுவ லாறு.

பொங்கும் சுரும்பினம் செங்கழுநீர் உண்ணும் - மிகுந்த வண்டுக் கூட்டம் செங்குவளை மலரிலுள்ள தேனையுண்ணும். புல் அருந்தும் ஆனினம் செம் கழுநீர் உண்ணும் - புல் மேயும் மாடுகள் சிவந்த அரிசி கழுவிய நீரை உண்ணும். பொங்குதல் - மிகுதல். சுரும்பு - வண்டு. ஆன் - மாடு. இனம் - கூட்டம். செங்கழுநீர் - செங்குவளை.

அங்கு உறும் நாள் அஞ்சுஅல் -நான் அங்கு வரும்நாள் ஐந்துஅல்ல. அகத்தே பெறுவல் அஞ்சல்—அதற்கு முன்னரே அடைவேன் ‘நான் எப்போது வருவேனோ என்று எண்ணி’ அஞ்சற்க. எனும் அஞ்சலினை அஞ்சலகத்தே பெறுவல் - என்று எழுதிய கடிதத்தை அஞ்சலகத்தே பெற்றேன். ஆறு - என்பாள் இடம். இது, தலைவன் வர நாளாகும் என்ற தலைவிக்கு, தலைவன் எழுதிய அஞ்சல் பெற்ற தோழி கூறியது.

அகம் - உள். அகத்தே பெறுவல் - அதற்குள்ளே - அதற்கு முன்னே அடைவேன், அந்த நாளை. அஞ்சல் - அஞ்சற்க. எதிர்மறைவியங்கோள் வினைமுற்று. அஞ்சலகம் - தபாலாபீஸ். அஞ்சல் - கடிதம். பெறுவல் - பெற்றேன். கால வழுவமைதி. என்பாள் என்பது இசையெச்சம். (90)

96. பெய்த மழைநீரும் பெய்ம்முறை செய்வாருஞ்
செய்தவணை மேவுந் திருநஞு—கைத
வழக்கொழியாப் போற்பண்ட மாற்றிவரும் வாரி
வழக்கொழியாப் பேரதரின் வைப்பு.

பெய்த மழைநீர் செய்த அணை மேவும் - பெய்த மழைத் தண்ணீர் கட்டிய அணையை அடையும். இது, காளிங்கராயன் அணையைக் குறிக்கும். பெய்முறை செய்வார் செய் தவணை மேவும் - இந்நேரம் இன்னார் வேலை செய்வதெனை வரையறை

செய்து கொண்டு வேலை செய்வோர் தாம் செல்லும் நேரத்தே அங்குச் செல்லும்.

பெய்முறை - இந்நேரம் இன்னார் வேலை செய்வதென வரையறுக்கப்படுதல். அதாவது, முறை வைத்துக் கொண்டு வேலைசெய்தல். இது தொழிற்சாலைத் தொழிலாளரின் கடமை யுணர்ச்சியைக் குறிக்கும். தவணை - முறை.

கை தவழ கொழி ஆ போல்- கையால் தடவச் சுரந்து பால் தரும் மாட்டைப்போல, பண்டம் மாற்றி வரும் வாரி - நிரம்பப் பொருள்களை அங்குமிங்கும் கொண்டு செல்லும் வாரிகள், வழக்கு ஒழியா - செல்லுதல் ஒழியாத - இரவு பகல் எந்நேரமும் செல்கின்ற. பேர் அதரின் வைப்பு - பெரு வழியின் இருப்பிடம். அதர் - வழி. இது, சென்னையிலிருந்து கள்ளிக்கோட்டை செல்லும் பெருவழி. அதரின் வைப்பு - அதரையுடைய ஊர். வாரி - லாரி. (91)

97. **ஆக்குபுன லைப்பயிர்க்கு மத்தகுதி யுள்ளவர்க்கும்**
**வாக்குரிமை நல்கும்ப வானியே—தீக்கரும**
**நாடார் விரும்பு நலஞ்செய்வார் நல்லதமிழ்**
**நாடார் விரும்பு நகர்.**

ஆக்கு புனலை பயிர்க்கு வாக்கு உரி மை நல்கும் - கிணற்று நீரைப் பயிர்க்கு நீரிறைக்கும் பறி மேகம் போல் வாக்கும். அ தகுதி உள்ளவர்க்கு வாக்குரிமை நல்கும் - தேர்ந்தெடுக்கும் இடங்களுக் கேற்ற தகுதி உள்ளவர்க்கு வாக்குரிமையை வழங்கும்.

ஆக்குபுனல் - கிணற்றுநீர். வாக்கு உரி - வாக்குகின்ற உரி - பறி. வாக்குதல் - நீர் இறைத்தல். உரி - தோல். அது, கருவியாகுபெயராய்த் தோலால் செய்த பறியை உணர்த்திற்று. பறி - நீர் இறைக்கும் தோற்கருவி. மை - மேகம். வாக்குரிமை - வாக்கு - ஓட்டு. நல்குதல் - வழங்குதல், போடுதல். ஊர்மன்றம், நகர் மன்றம், நாட்டாண்மைக் கழகம், சட்டமன்றம், பாராளுமன்றம் ஆகிய இடங்கட்கு ஏற்றவரைத் தேர்ந்தெடுத்தல் வாக்காளர் கடமையாகும்.

தீ கருமம் நாடார் - கெட்டகாரிங்களை நினையார், எண்ணுார். விரும்பும் நலம் செய்வார் - பிறர் விரும்புகின்ற நன்மைகளைச் செய்வார். தமிழ் நாடார் விரும்பும் நல்ல நகர் - தமிழ் நாட்டு மக்கள் விரும்பிவந்து நீராடிச் செல்லும் நல்ல ஊர். காவிரி யாற்றின் கரையிலுள்ள ஊர்களில், பவானி போல நீராடு துறைகள் அமைந்த ஊர் வேறென்றும் இல்லை.

தீக்கருமம் நாடாரும் நலஞ் செய்வாரும் வாழும் நாடார் விரும்பும் நகர் என்பதாம். (92)

**98. நெட்டிரவை மின்விளக்கும் நேர்கரையை மன்வளக்கும்**
**பட்டப் பகல்செய் பவானியே—கட்டிக்**
**கரும்பொன்று கையார் கரும்பீர்வாள் செய்யுங்**
**கரும்பொன்று கையார் களம்.**

நெடுஇரவை மின்விளக்கு பட்டப் பகல் செய் - மிக்க இருளுடைய இரவை மின்விளக்குகள் ஒளியுடைய பகல் போல் செய்யும். நேர்கரையை மன்வளக்கும் அப்பு பட்டு அகல் செய் - வெள்ளத்தின் எதிரில் உள்ள கரையை எப்போதும் வெள்ளம்பட்டு அகலச் செய்யும்.

நெட்டிரவு - நெடுஇரவு. பட்டப்பகல் - மப்புமந்தார மில்லாத பகல். மன் - நிலையாக - எப்போதும். வளக்கும் - மிகும். வளக்கும் அப்பு - மிக்கநீர் - வெள்ளம்.

கட்டிக் கரும்பு ஒன்று கையார் - கட்டியாகும் கரும்பு போன்ற கையை யுடையை மகளிர், கரும்பு ஈர்வாள் செய்யும் - கரும்பு வெட்டும் அரிவாள் செய்யும், கரும்பொன் துகையார் களம் - இரும்பு வேலை செய்வார் இடம்.

கட்டி - கருப்புக்கட்டி - வெல்லம். ஈர்தல் - வெட்டுதல். வாள் - அரிவாள். கரும்பொன் - இரும்பு. துகைத்தல் - காய்ச்சித் தட்டுதல். இரும்பைக் காய்ச்சித் தட்டி இரும்புக் கருவிகள் செய்வார் - கொல்லர். களம் - இடம். (93)

**99. மன்னுார்பல் லூரிகளும் வண்சேற்றில் வேரிகளுஞ்**
**சென்றுற் றிசையுந் திருநணு—முன்னேற்ற**
**நோக்க முடையார் நுவன்று தமர்வெகுண்டு**
**நோக்க முடையார் நுவல்.**

மன் ஆர் பல் ஊரிகள் செல் நால் திசையும் - நிலையாக அழகிய பல ஊரிகள் நாலாபக்கமும் செல்லும். வண்சேற் றில் வேர்கள் செல் நாற்று இசையும் - வளவிய சேற்றில் வேர்கள் செல்லும் நாற்றுத் தழையும்.

மன் - நிலையாக. ஆர் - அழகு. ஊரி - பஸ், கார். வண் சேறு - வளவிய சேறு. வேர் இ கள். இ—சாரியை. பவானியி லிருந்து - ஈரோடு, பெருந்துறை, சென்னிமலை, திருப்பூர், கோவை, கவந்தப்பாடி, கோபி, சத்தியமங்கலம், அத்தாணி, கள்ளிப்பட்டி, அந்தியூர், உலகடம், வெள்ளிதிருப்பூர், குருவரெட்டியூர், . மேட்டூர், இடைப்பாடி, சங்ககிரி, பள்ளியபாளையம், திருச்செங்கோடு, நாமக்கல், திருச்சி, பாண்டமங்கலம், சேலம், ஆத்தூர், தர்மபுரி, கிருஷ்ணகிரி, ஓசூர் பழனி முதலிய ஊர்களுக்கு ஊரிகள் செல்லுகின்றன. இசைதல் - இயைதல் - தழைதல்.

முன்னேற்றம் நோக்கம் உடையார், தமர் நுவன்று வெகுண்டு நோக்க முடையார் நுவல் - சுற்றத்தார் கடிந்து கூறி வெகுண்டு நோக்கினும் வருந்தார்.

நுவன்று-கடிந்துகூறி. முடைதல் - வருந்துதல். தாழ்த் தப்பட்டாரோடு பழகுதல், புழங்குதல், மூடப்பழக்க வழக்கங் களை ஒதுக்கிப் புதிய முறைகளைக் கைக் கொள்ளுதல் போன்ற சமூக முன்னேற்றத் தொண்டு செய்தல் கூடா தெனப் பெற்றோர் முதலிய சுற்றத்தார் கடிந்து கூறிக் கோபங்கொள்ளின், அதற்காக வருந்தித் தம் முன்னேற்றத் தொண்டைக் கைவிடார் என்பதாம். நுவல் - விருப்பம் - விரும்பிவாழும் இடம். (94)

100. பார்கிழியச் செல்லுநரும் பந்தயத்தில் வெல்லுநரும்
வார்கிழிகைக் கொள்ளும்ப வானியே—மார்கழி
மாதந் திருமுறைசெய் வைகறையி லோதுநர்க்கு
மாதந் திருமுறைசெய் வைப்பு.

பார் கிழிய செல்லுநர் வார் கிழி கைக்கொள்ளும் - மிகவிரைவாக ஓடுவார் கச்சையும் அரையுடையும் அணிந்து கொள்வர். பந்தயத்தில் வெல்லுநர் வார் கிழி கைக்கொள் ளும் - போட்டிப் பந்தயத்தில் வெல்வோர் பெரிய பணமுடிப் பைப் பெறுவர்.

பார் - நிலம். கிழிய - பிளக்க - குழிபட. மிக விரைவாக ஓடுவோர் என்பதாம். வார் - கச்சை, பெரிய. கிழி - அரையுடை, பணமுடிப்பு. வார் கிழி - பெரிய பணமுடிப்பு. கை - துணைவினை. கைக்கொள்ளும் -கொள்ளும். பணமுடிப்பு-பரிசு.

மார்கழி மாதம், திருமுறை செய் வைகறையில் ஓதுநர்க்கு - தேவாரத் திருமுறையை மக்கள் தொழில் செய்யத் தொடங்கும் அதிகாலையில் ஓதுவோர்க்கு. மா தந்து - பெருமையோடு வரவேற்புத் தந்து. இருமுறை செய் - பெரிய வரிசை செய்கின்ற. வைப்பு - ஊர்.

வைகறை - அதிகாலை. மார்கழி மாதம் முழுவதும் அதிகாலையில் திருமுறைக் கழகத்தார் தேவாரம் ஓதிக்கொண்டு ஊர்வலம் வருவர். மா-பெருமை. முறை - வரிசை - சிறப்பு. அதாவது மாலையிடுதல் முதலியன. மா தந்து - பலகாரம் முதலிய சிற்றுண்டி தந்து என்றுமாம். தேவாரம் ஓதி வருவோர்க்கு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வீட்டில் சிற்றுண்டி வழங்கிப் பெருமைப் படுத்துதல் உண்டு. (95)

**101.** மல்யாப் பிளமையிலும் மாமுத் தமிழியலும்
பல்யாப் பிலகும் பவானியே—நல்யாப்
பியம்பயில்வார் வாழ்வு பெறவிழைந்து தொல்காப்
பியம்பயில்வார் வாழ்வுமிகும் பேறு.

மல் யாப்பு இளமையில் பல் யாப்பு இலகும் - உடல் வலியுள்ள உறுதியான இளமைப் பருவத்தில் பற்கள் உறுதியாக விளங்கும். மா முத்தமிழ் இயல் பல் யாப்பு இலகும் - பெருமை பொருந்திய முத்தமிழின் தன்மை பல செய்யுட்கள் விளங்கும்.

மல் - உடல்வலி. யாப்பு - உறுதி. இயல் - தன்மை. யாப்பு - செய்யுள். முத்தமிழ்-இயல் இசை நாடகம். பழைய முத்தமிழும் செய்யுள் வடிவானவை என்பதாம்.

நல் யாப்பு இயம்பு அயில்வார் - நல்ல உறுதிச் சொல்லைக் கேட்பார். வாழ்வு பெற விழைந்து - நல்வாழ்வு பெற விரும்பி. தொல்காப்பியம் பயில்வார். வாழ்வு மிகும் பேறு - சிறந்த வாழ்வு வாழும் இடம்.

யாப்பு - உறுதி. இயம்பு - சொல். அயில்தல் -கேட்டல். விழைந்து - விருப்பி. பேறு - நிலைபெற்றுள்ள இடம். (96)

102. வடுக்குற்று வாரும் வழக்குரைப் பாரும்
நடுக்கற்றுப் பேசு நணுவே - மடுக்கண்
வலைதப்பு வாளை வலிதேகப் போந்த
வலைதப்பு வாளையுறும் வைப்பு.

வடு குற்றுவார் நடுக்கு அற்றுப் பேசும் - குற்றத்தை நீக்கும் பேச்சாளர் அச்சமில்லாமல் பேசுவார். வழக்கு உரைப்பார் நடு கற்று பேசும் - வழக்கறிஞர் நீதி நூல்களைக் கற்றுப் பேசுவர். வடு - குற்றம். குற்றுதல் - நீக்குதல். குற்றம் - சொற் குற்றமும் பொருட் குற்றமும். இவர் பேச்சாளர். வழக்குரைப்பார் - வக்கீல். நடு -நீதி, நீதிநூல்.

மடுக்கண் வலை தப்பு வாளை - ஆழமான நீர்நிலையில் வலைக்குத் தப்பிய வாளைமீன். வலிது ஏக போந்த அலை தப்பு வாள் - விரைந்து செல்ல உண்டான அலையினால் தப்பிய மனைவியை. ஐ உறும் வைப்பு - கணவன் அடையும் ஊர்.

மடு - ஆழமான நீர்நிலை. ஐ - தலைவன், கணவன். நீராடும்போது மடுவில் மூழ்கியவள், வாளைமீன் போன விசையினால் உண்டான அலையினால் கொண்டுவந்து கரை சேர்க்கப் பெற்றாள் என்க. இதனால், அது மிகப் பெரிய மீன் என்பது பெறும். வைப்பு - இடம், ஊர். (97)

103. தக்கோல வாட்டியருஞ் சாத்தெண்ணெ யாட்டியருஞ்
செக்கோலங் கொள்ளுந் திருநணு - மிக்காங்கு
மஞ்ச டரும்பழன மாவளத்த தாகவுள
மஞ்ச டரும்பழன வைப்பு.

தக்கோல ஆட்டியர் செம் கோலம் கொள்ளும் - தகுதியான அழகுடைய பெண்கள் கை கால் நகங்கள், இதழ் இவற்றைச் சிவப்பாக அழகு செய்துகொள்ளும். சாத்து எண்ணெய் ஆட்டு இயரும் செக்கு ஓலம் கொள்ளும் - வணிகர் எண்ணெயாட்டும் செக்கு ஓசை செய்யும்.

தக்க கோலம். தகுதியான அழகு. தக்கோலம் - தொகுத்தல் விகாரம். ஆட்டியர் - பெண்கள். கோலம் - அழகு. சாத்து - வணிகம், வணிகர். ஆட்டு இயரும் -

ஆட்டும். இவ்வூர்த் தனலட்சுமி மில்லில் எண்ணெய் ஆட்டப் படுகிறது. இயர்-இயல்; போலி.

மிக்கு மஞ்சள் தரும் பழனம் மாவளத்தது ஆக உள - மிக மஞ்சள் விளைகின்ற வயல் மிக்க வளமுடையதாக உள்ள. மஞ்சு அடரும் பழன வைப்பு - மேகஞ் சூழ்ந்த பொய்கையை உடைய ஊர்.

மிக்கு - மிக. பழனம் - வயல். மா - மிக்க. மஞ்சு - மேகம். பழனம் - பொய்கை. பொய்கை - ஏரி, குளம். வயல் வளமுடைய தாகும்படி யுள்ள பொய்கை சூழ்ந்த ஊர் என்க. (98)

104. மாவளையுங் கூவளையும் வாலரியும் போலரியுஞ்
சேவடிக்க ணார்க்குந் திருநாண - மாவடுக்கட்
டேமொழியார் வாழ்வகலத் தேம்பினுஞ்சுற் றத்தார்மாட்
டேமொழியார் வாழ்வகலத் தேம்.

(1) மாவளை சேஅடிக்கண் ஆர்க்கும் - வயலிலுள்ள சங்கு எருத்தின் காற்கீழ்ப் பட்டுக் கத்தும். (2) கூ வளை சேவடிக்கண் ஆர்க்கும்-ஒலிக்கின்ற சிலம்பு சிவந்த அடியின் கண் ஒலிக்கும். (3) சே வால் அரி கண் ஆர்க்கும் - சிவந்த தூய்மையான கோடு கண்ணைப் பொருந்தும். (4) வடி போல் அரி கண்ஆர்க்கும் - மாவடுவின் ஒப்புமை கண்ணைப் பொருந்தும். அதாவது, மாவடு கண்ணுக்கு உவமையாகும்.

மா - வயல். வளை - சங்கு. சே - எருது. கூ வளை - ஒலிக்கின்ற வளை - சிலம்பு. வால் - தூய்மை. போல் அரி - உவமை; ஒரு பொருட் பன்மொழி. வடி - மாவடு - மாம் பிஞ்சு.

மாவடு கண் தேம் மொழியார் - மாம்பிஞ்சு போன்ற கண்ணையும் தேன்போன்ற இனிய சொல்லையுமுடைய பெண்கள், வாழ்வு அகல தேம்பினும் - வறுமையால் வாழ்வு கெட வருந்தினும், சுற்றத்தார் மாட்டு ஏம் ஒழியார் - சுற்றத் தாரிடம் இன்புறுதலை விடமாட்டார். சுற்றத்தாரை வர வேற்று அளவளாவுவர் என்பதாம்.

இது, நற்குடி மகளிர் பண்பாகும்.

" குடநீரட் டுண்ணும் இடுக்கட் பொழுதுங்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங்
கடனீர்மை கையாருக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சி யாள் " (நாலடியார்)

என்னும் நாலடியாரைக் காண்க. வாழ்வு அகல் அம் தேம் - வாழ்வு மிகும் அழகிய இடம். அகல - நீங்க, பெருக, விரிய. தேம்புதல் - வருந்துதல். ஏம் - இன்பம். அம் - அழகு. தேம் - இடம். (99)

105. அற்ககல்செல் வத்துகளு மாயகணக் காயர்களு
நற்கலைகற் பிக்கு நணுவூரே - பொற்குமுதச்
செவ்வாய்ச் சியர்வாழுஞ் செய்குடும்பக் கைபயிற்றுஞ்
செவ்வாய்ச் சியர்வாழுஞ் சேர்பு.

அற்கு அகல் செல்வ துகள் - வருதலையும் போதலையும் உடைய செல்வத்தின் இயல்பை, அலை நற்கு கற்பிக்கும். ஆற்றில் வீசும் அலை தெளிவாகக் காட்டும். அலை கரைக்கு வருதலும் போதலும் போல செல்வம் வருதலும் போதலும் உடைய தென்பதாம். ஆய கணக்காயர் நல்கலை கற்பிக்கும் - தகுதியாய ஆசிரியர்கள் நன்கு கல்வி கற்பிக்கும்; நல்ல கலைகள் கற்பிக்கும் என்றுமாம்.

அற்குதல் - அடைதல், வருதல். அகலுதல் - நீங்குதல், போதல். செல்வத்துகள் - செல்வத்தின் இயல்பு. துகள் - குற்றம். அது, அற்ககல் செல்வத்தின் இயல்பாயிற்று. கணக்காயர் - ஆசிரியர். நற்கு - நன்கு. கலை - கல்வி, மொழி.

பொன் குமுத செவ்வாய்ச்சியர் - அழகிய ஆம்பல் மலர் போலச் சிவந்த வாயையுடைய இளம் பெண்கள்; வாழும் குடும்பம் செய் கை பயிற்றும் - பின்னர் மேற்கொண்டு வாழும் குடும்பம் நடத்தும் ஒழுங்கினைப் பழக்கும், செவ் ஆய்ச்சியர் வாழும் சேர்பு - சிறந்த தாயர் வாழும் ஊர். கை - ஒழுக்கம், ஒழுங்கு. (100)

106. வாழ்க திருநணு வாழ்க பவானிநகர்
வாழ்க திருவானி மாக்கூடல் - வாழ்கநனி
வண்டமிழ்ப்பண் பாடு மறுமலர்ச்சி யுற்றினிது
தண்டமிழர் வாழ்க தழைத்து.

# நூற்பொருள் அகர வரிசை

# பாட்டு முதற் குறிப்பு

1. பொன்னிவாய்
2. பாடற்பனுவல்
3. வானிக்கொடி
4. நாடற்கினிய
5. வண்டமிழ்ப்பா
6. பூமருவும்
7. ஆண்டாரக
8. வந்தாரிடையி
9. அட்டுணுகட்
10. கஞ்சச்கழனி
11. தாதார்கருங்கு
12. தாய்க்குத்தா
13. நாட்டையினி
14. மெய்ந்நின்ற
15. தாயரொளி
16. மேவாரத்தா
17. வீடுதொறும்
18. பிள்ளையறியா
19. வையாருஞ்
20. தீங்காயளி
21. தாடருமேம்
22. இலகுறுநல்
23. கமஞ்சூலும்
24. பாயங்கய
25. மாலையறுவை
26. குழந்தைவிளை
27. வற்ருமழை
28. தகையெய்து
29. செந்தமிழாய்
30. பூவையர்பூ
31. மாக்கண்வள
32. முற்ருமொழி-
33. காவியங்கண்
34. தாய்மையிரு
35. பல்வணிகர்.
36. பூப்பழகு
37. திங்களுந்துசோ
38. வம்பலர்
39. மங்கையர்த
40. காஞரும்
41. மேனியுமின்
42. தார்பொருந்து
43. மங்கையர்பொ
44. அங்கோதை
45. ஊடையும்பா
46. பாறியுள்ளான்
47. வண்ணமனே
48. நாற்றுநடு
49. தேன்மொழி
50. மாணிழையார்
51. உவ்வாநூல்
52. வாலிழையார்
53. கள்கமழ்பூங்
54, மங்கையர்பூண்
55. வாரத்திஞல்
56. இக்கரம்பை
57. நற்றமிழுங்
58. கம்பாதி
59. கற்குந்தமிழ்
60. பொழுதலரை
61. கல்வித்துறை
62. உற்றமழைக்
63. கற்றுணர்ந்த
64. செழுங்கனி
65. தங்குறையை
66. அம்பலகுகோ
67. உய்யுமுயிர்
68. மாலுமயிற்
69. ஒய்யாப்பசி
70. ஏர்தருமூர்

71. தம்மெருவை
72. ஏடணியூர்
73. உங்கோலமெல்
74. வம்பார்வா
75. வன்னப்பூஞா
76. ஓர்த்தறிசி
77. திண்ணியபாட்
78. மும்மையறி
79. பாமேவியற்
80. நெல்லாதி
81. பாவலரும்
82. இல்லாண்மை
83. வெண்பஞ்சு
84. மாஞர்வாய்
85. ஈடறுநல்லார்
86. குறுங்கரும்புட்
87, வண்மைச்செந்
88. தண்ணடைக்கு
89. மொய்த்தன்று
90. நம்பிமுயல்
91. அய்துமழிப்
92. பம்பிளஞ்சேய்
93. இடுகலைகற்
94. பாவையர்செவ்
95. பொங்குஞ்சு
96. பெய்தமழை
97. ஆக்குபுனலை
98. நெட்டிரவை
99. மன்ஞர்பல்
100. பார்கிழிய
101. மல்யாப்பிள
102. வடுக்குற்று
103. தக்கோலவாட்
104. மாவிளையுங்
105. அற்ககல்
106. வாழ்கதிரு

---